# தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரமும்

# மானஸோல்லாஸமும்




இது

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் பாடிய நூலுக்கு

அவரது பிரதம சீடர்

ஸுரேசுவராசாரியார்

செய்த

## வார்த்திகம்,

## கௌடபாதகாரிகைக்கு வழிநூல்.



புலியூர், கோடம்பாக்கம்,

வேத ப்ரவசன மந்திரத் தலைவரும்

தமிழில் ரிக் ஸாமவேதங்களைக் கண்டவருமான

சிவத்தியாநாநந்த மஹர்ஷி

தமிழ்ப்படுத்தியது.



சங்கர ஜயந்தி நாள்,
சித்திரபானு, வைசாகம்
புனர்வஸு.

விலை அணா 8

# முகவுரை

"ஈசன்பால் மிகப்பற்றுளோன், ஈசனைப் போன்றே
பேசும் ஸத்குருப்பற்றுளோன், உயர்மனத்து அவற்கே
பேசும் இப்பொருள் விளங்குறும்."

—சுவேதாசுவதர உபநிஷத். (6 - 23.)

வேதத்தை முதல் நூலாக ஒப்புக்கொள்ளுவோர் எவரும் அவ் வேதத்தின் தீர்மானமான கருத்து என்னவென்று அறியவேண்டுவது அவசியம் ஆகும். ஒரு பொருளை இலகுவாக அறிந்து அநுபவிக்க முடியாமலிருப்பதற்காக, அதனை ஒத்த வேறொரு பொருளைக் கைக் கொள்ளுதல் சிறந்தது அன்று. அத்வைதம் ஒன்றே உண்மையானது. அது நமக்குப் போதிப்பது என்ன? 'ஈசுவரன் ஒருவனே ஸத்தும், சித்தும் ஆநந்தமும் ஆவான். அவனைத் தவிர வேறு ஜீவர்கள் இல்லை; ஜடம் இல்லை' என்பதே. ஜீவன் என்பது 36 தத்துவங்களும் தொழிற்பட்டபோது எழுந்த ஓர் சக்திக்கு வந்த பெயர் ஆகும். இதற்கு அன்னியமாக, உடலிலுள்ள 36 தத்துவங்களும் தொழிற் செய்யும்போது, ஸாட்சி மாத்திரையாக நின்று பார்த்துக்கொண் டிருப்பது ஆத்மா. உலக ஸாட்சியாக நிற்கும் ஈசுவரனைப் போலவே, உடல் ஸாட்சியாக நிற்பது ஆத்மா ஆம். கடம் உடைந்த பின்னர் அக் கடத்தில் இருந்த ஆகாசம் மஹாகாசமாக விளங்கியதுபோல உடலா கிய உபாதி தீர்ந்த பின்னர் பரமாத்மாவாக விளங்குவது ஜீவாத் மாவே. எல்லையற்ற பரமாத்மாவானது எல்லைப்பட்ட ஜீவாத்மாவாக நிற்பான் ஏன் எனில், பரமாத்மா தனது மாயையினால் உலகமாக விரிந்து காட்ட எண்ணியபோது மனம் துவாரா ஜடத்தைப் பிரகா சிப்பிக்க எடுத்த கோலமாகும் அது. இந்தக் கோலத்தில் அமைந்த பரமாத்மா, அம்மாயையால் கட்டுப்பட்டு, ஜடமாகிய சரீரத்தைத் தானாகவே மதித்துச் சுகதுக்கங்களைத் தான் அநுபவிப்பதாக அறியா மையால் மயங்கியது. தேகாபிமானத்தை, அறிவு கொண்டு சேதித்து, உண்மையை உணர்ந்து, அவ்வுண்மையைத் தெரிந்து கொண்டபடியே நிற்கத் தலைப்பட்டபோது, தனது ஸர்வாத்மகத்துவம் ஜீவாத்மாவுக்கு வெளியாகிறது. இதனை வெளிப்படுத்துபவர் தக்ஷிணாமூர்த்தியாகச் சகளீகரித்துக் காட்டிய அப்பரமாத்மாவே. தன்னைப் பசுவென்று எண்ணியிருந்த புலிக்குட்டி, மற்றொரு புலி வந்து உணர்த்திய

தும், தானும் புலியே ஆனது போலத், தன்னைக் கட்டுப்பட்ட ஜீவனாக எண்ணியிருந்த ஆத்மாவுக்குக் கட்டுப்பட்ட அவஸரம் போல் வேஷந் தரித்த பரமாத்மா வந்து உண்மை நிலையை விளக்கினதும், ஆத்மா தன்னைத்தான் அறிந்து பரப்பிரஹ்மமாக ஆகிறான். இவ் வுபாசனத் தோற்றமும் உண்மையை விளக்கவந்த பொய்த்தோற்றந்தானே எனின், அவ்வகைத் தோற்றமானது மெய்யை உணர்த்துவது என்னும் பெரும் சிறப்பிற்று ஆதலின், அப் பொய்த் தோற்றம் தள்ளப்படாததாயிற்று. இதுவன்றி, உலகம் வேறு, ஜீவன் வேறு, ஈசுவரன் வேறு என முப்பதார்த்தங்களை நிலையான பொருள்களாகக் கொண்டு, அம் முப்பதார்த்தங்களில் ஜீவனானவன் ஈசுவரனைத் துணைக்கொண்டு உலகத்தை அல்லது மாயையை வெல்லுகிறான் என்பது வடித்து எடுத்த லோகாயதம் ஆகும். உலகத்து ஒருவரை ஒருவர் அடக்கியாளுவது, ஒரு நாட்டை மற்றொரு நாடு அடக்கியாளுவது என்ற விபரீதங்கள் எல்லாம் இவ் வுண்மைமாறாட்டத்தாலேயே ஏற்படுவன. உண்மையில் ஜகத்தானது, அறிவில்லாவிடின், தன்னிருப்பினால் யாதொரு பயனையும் அளிக்க வல்லதல்ல வாதலின், அறிவுதான் உண்மை என்று உணரும் ஆற்றல் வாய்ந்தோன், இவ்வித விபரீதச் செய்கைகளுக்குள் புகுந்து, இவற்றால் வரும் கிலேசங்களை அநுபவிக்கமாட்டான். வேதத்தில் செறிந்து கிடக்கும் இவ்வத்துவித உண்மையை, சங்கரர் தமது குருவான் உணர்ந்து, அக் குருக்களுக்கு எல்லாம் பரமகுருவென எல்லாராலும் கொண்டாடப்படும் தக்ஷிணாமூர்த்தியைத் துதிக்கும் முகமாக வெளிப்படுத்தினார். வெறும் கொள்கைகளைமட்டும் விரித்துரைத்து நிரீசுவரவாதமாக நின்றுவிடும் இதர வேதாந்த நூல்களைப் போலாது, தமிழில் தாயுமானார் பாடல்போன்று, யோகமும் ஞானமும் ஆகிய இரண்டும் ஸித்திக்கவல்ல உபாஸனா கிரந்தமாகவுமிருத்தலின், இவ்வேதாந்த சாஸ்திரம் சிறந்த அறிவு நூலாகும் என்க. இதன் உள்ளக்கிடையை அச் சங்கரரிடத்திருந்து அநுபவித்து உணர்ந்த மண்டனமிசிரர் என்னும் ஸுரேசுவராசாரியார் இத் துதிநூலுக்கு எழுதியுள்ள வார்த்திகமே (பொழிப்புரையே) மானஸோல்லாஸமெனப் பெயர் பெற்றது. இவ்விருநூலும் வடமொழியில் செய்யுட்களாகவே அமைந்திருத்தலின், பாராயணம் பண்ணுவோர்க்கு உபயோகமாகும் வண்ணம் தமிழிலும் காவியமாகவே இயற்றப்பெற்றது. செய்யுட்களின் நடை, மிக எளிய நடையாயினும், உள் கருத்துக்கள் பல கருமையாக நின்றவிடங்களை விளக்கியே, வடமொழி வியாக்கியானங்களை ஆதாரமாகக்கொண்டு, குறிப்புரைகள் ஆண்டாண்டு பெய்யப்பெற்றுள்ளன.



இதனைப் படிப்போர் பலரும் இகபர சுகங்களைப் பெறுவார்கள் என்பதற்கு ஐயமில்லை. இகத்தில் உண்மைப் பொருளைப் பெற்று அநுபவித்தலினும் சிறந்தது வேறு யாது உளது? அவ்வநுபவ காலத்திலேயே மோக்ஷம் ஒருவனுக்கு ஸித்தித்துவிட்டதை அவன் உணர்ந்து அநுபவித்திருப்பானாயின், தேகம் விழுங் காலத்தில் அந் நிதித்தியாஸன பலத்தினால் அவன் விதேஹமுக்தி யடைந்துவிட்டதைச் சொல்லவும் வேண்டுமா? அதனால் வேதஸாரமாக நிற்கும் இந்நூலை எல்லாரும் படித்து உணர்ந்து அநுபூதி பெற்று மோக்ஷம் அடைவார்களென நம்பி, அத் தக்ஷிணா மூர்த்தியையே அவர்களுக்கு அருள்புரியுமாறு பிரார்த்தித்து, இந்நூலைத் தமிழில் வெளியிடலானேன்.

வேத ப்ரவசன மந்திரம்
கோடம்பாக்கம், சென்னை
12—4—42

சிவத்தியாநாநந்த மஹர்ஷி

—

# *தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரமும்

அதன் உரைவிளக்கமாகிய

# †மானஸோல்லாஸமும்

## முதல் உல்லாஸம்

### பரமாத்மாவே ஜீவாத்மாதான் என்பது

1. அகிலமும் காணும் ஆடியில் நகரம்
நிகரென அகத்துளே இருக்க,

---

### கடவுள் வாழ்த்து

1. நன்மை யீக வெனக்கு விநாயகன் ;
நன்மை யீக வெனக்கு மொழிமகள் ;
நன்மை யீக வெனக்கு மகேசுவரி ;
நன்மை யீக ஸதாசிவ னெற்குமே.

## முதற்றுதியின் வார்த்திகம்

### பீடிகை

1. ஆன்ம லாபத்தின் மிக்கதோர் அரும்பயன் அளிக்கும்
மேன்மை சார்ந்த ஆதாயம் இல் என முனி வரர்கள்
பான்மையோ(டு)உணர்ந்திடுவர் ; அவ் ஆயத்தின் பொருட்டே,
ஆன்மம்ஆம் பரமேசனைக் கவி புகழ்ந்(து) அறைவான்.

---

*தக்ஷிண = தேர்ந்த, அமூர்த்தி = உருவமில்லாதவன். இதனாலேயே,

"மைவிடா தெழுநீல கண்ட குருவே விஷ்ணு
வடிவான ஞான குருவே
மலர்மேவி மறையோதும் நான்முகக் குருவே
மதங்கள் தொறும் நின்ற குருவே
கைவிடாதே என்ற அன்பருக்கு அன்பாய்க்
கருத்தூ டுணர்த்து குருவே" என்றார் தாயுமானார்.

†மானஸோல்லாஸம் = மனத்தின் சிறந்த ஓட்டமாகிய விளையாட்டு.

1. மகேசுவரன் என்றும் பாடம். 'நன்மையீக வெனக்கு ஸதாசிவன்' என்றும் பாடம். வார்த்திகம், பொழிப்பு. இந்நூலாகிய ஸ்தோத்திரம் ஆதி

வகைபெறப் புறத்தே தோற்றிய தென்ன,
மயலினால் துயிலினிற் போலப்

### பீடிகை

#### இத்துதியின் நோக்கம்

2. எவன், தன்இச்சையால் படைப்பினுள் புகுந்(து)எலார்உளத்
நிவம்பெறப் பலர்காணுற நிற்பவன், அந்தத் [தும்
துவந்தம்இல் பரம்பொருளனே, தோயும் இப்போற்றால்
இவண் புகழ்ந்து போற்றிடப் பெற்றான் எழிலொடும் அறிக.

#### ஆதாரக் கேள்விகள்

3. உள்ள(து) ஈண்(டு)ஒளிர்கின்ற(து)என்று ஒருவழக்(கு)உலவும்;
உள்ள தன்மையோ(டு) ஒளிர்கின்ற தன்மை இவ்இரண்டும்
கொள்ள நின்ற நற்பொருள் எது? கூறும் எப்பொருளும்
தள்ளுருவகை அவைதமில் நிலைத்தவா? அலதேல்,

4. எப்பொருட்கும் ஈண்(டு) அகத்துறும் ஆத்துமா என்னும்
மெய்ப்பொருட்கணே நிலைபெற நின்றவா? மேலும்,
மெய்ப்பொருட்டன்மை எத்தகைத்(து)? அரும்உயிர்த்தன்மை
செப்புதற்(கு) எந்தத் தகைமைய(து)? எலாவற்றின் ஆன்மா

5. எத்தகைத்ததாம்? அதனை எவ்வா(று) உயிர் உணரும்?
அத்தகைத்த நல்உணர்விற்குக் கருவி யா(து)? அதனை
மெய்த்தகைப்பெற உணர்ந்திடின் மேவுறும் பயன்என்?
மற்றும் ஒன்றெனல் எப்படி மருவுறும்? இன்னும்,

6. முற்றுணர்வினன் ஆகவும், முழுவதும் புரியும்
நற்றிறலினன் ஆகவும் நவிலுற ஆன்மா

---

சங்கரரால் செய்யப்பெற்றது. இவ்வார்த்திகம் அவரது முக்கிய சீடரான மண்டனமிச்ர ரென்னும் ஸுரேசுவராசாரியாரால் செய்யப்பட்டது; உண்மையான வேதாந்தக் கருத்தை விளக்குவது. ஆன்மமாம் பரமேசனை என்றார், ஜீவான்மா பரமான்மாக்கள் ஒன்றே என விளக்க என்க.

2. எவன் நிற்பவன் என இயைக்க. துவந்துவம், துவந்தம் இரண்டற்ற என்ற பொருளில் வந்தது. எழிலொடு போற்றிடப் பெற்றான் எனக் கூட்டி அவ்வாக்கியத்தை அறிக என்பதன் செயப்படுபொருளாகக் கொள்க.

3. இது முதல் நான்கு பாட்டுக்களும் குளகம். 'குளகம் பல பாட்டொருவினை கொள்ளும்.'

1 முதல் 8 வரையிலுள்ள கேள்விகள் உண்மை உணர்தற்கு ஆதாரமான வினாக்களாம்,



பகுதியாற் கண்டும் விழிப்பினில் தனையே
பண்பினில் இரண்(டு)அறக் காண்போன்

---

உற்ற(து) எவ்விதம்?* எனக் கடாவுற்ற மாணவனை
உற்று நோக்கி அக்குரு விடையுரை தொடங்கினரே.

#### அகிலமும் ஆத்மத்திலுள்ளது

7. உலகம் இன்னவை இதனுளே யுள்ளன; அகில
உலகெனும் ஜகத் இதனுளே உள்ளது: முகுரம்
இலகு(ம்) மாற்றொளி போன்றது; புறத்(து) இருப்பதுபோல்
கலக மாயையால் காணுதற்(கு) அமைந்து நின்றதுவே.

8. 'தன்னுளே கிடந்தமைவுறும் ஜகமெலாம் கனவில்
பின்னமாக வேறொன்றெனக் காண்ப(து)எத் தகைத்தோ,
அன்ன பெற்றியே, நனவிலும் ஆர்ந்த இப் பவஞ்சம்
தன்னின் வேறதாத் தோன்றுறும் தன்மையாம்' உணர்க.

9. சொற்பனத்தினில் கண்ட(து)ஓர் பொருளின(து) உண்மை
தற்பரத்தின்ஆம் ஆத்தும உண்மையே தவிர்த்துப்
பொற்புறப் பிறி(து) அன்(று)எனப் புகன்றனர்; ஜடமாய்ச்
சொற்ப காலத்தின் அழிபவைக்(கு) என்ன வேற்றுமையே.

#### அகிலம் ஆத்மாவின் ஒளியால் பிரகாசிக்கின்றது

10. கனவினில் பொருள்விளக்கம்அக் கனவினைக் காண்போன்
றன(து) ஒளியினால் தோற்றிடும் விளக்கமே, பிறி(து)அன்(று);
உனின் நனவிலும் அத்தகைப் பெற்றியே உரைப்பார்,
மனஅறிவு கொண்(டு) எவற்றையும் மதித்திடும் அறிஞர்.

11. எழுந்தபின், துயில் காட்டிய பொருள்களில், எழுந்தோன்
உழுந்(து) அளவெனும் காணுவ(து) ஒன்றிலை; அதுபோல்
எழுந்து மெய் அறி(வு)உற்றபின் மெய்உணர்(வு)இயைந்தோன்;
அழுந்தும் இவ் உல(கு) அகிலமும் அறிவதே இலையால்.

---

*இக்கேள்விகளைப் பதினொன்றாக்கிக் கூறுவாருமுளர்.

7. மாற்றொளி - எதிரொளி, பிரதிபிம்பம். முகுரம் - கண்ணாடி. வாத காரணமானதுபற்றிக் கலக மாயை என்றார்.

8. ப்ரபஞ்சம், பவஞ்சமெனத் தற்பவமாயிற்று.

9. தற்பரத்தின்ஆம் என்றார், ஜீவான்மா பரமான்மாக்களின் ஒருமையை புணர்த்த.

7, 8, 9 செய்யுட்களால் ஸத்தின் உண்மையும், 10, 11-வது செய்யுட்களால் சித்(ஒளி)தின் உண்மையும் விளக்கப்பெற்றன.

தகுதிசார் அந்தத் திருக்குரு மூர்த்தி
தட்சிணா மூர்த்திக்(கு)இந் நமமே.

---

12. “ஆதிஅற்ற(து) ஓர் மாயையால் உறங்கும் அச் சீவன்
தீ(து) அறத் துயில் உணர்ந்திடும் காலத்துச், செனனம்
ஓது தூக்கமும் அற்றதைக், கனவின்றி உளதை
வாது தீர்(வு) உற இரண்(டு) அறும் அஃதினை அறிவான்.”

13. சுருதியால், குருஅருளிய சொல்லினால், யோகம்
தரு நிதித்தியா சத்தினால், கடவுளின் அருளால்,
உரிய தன் அறி(வு) ஏற்படும் அமையத்தின், ஒருவன்
பெரிதும் உண்டு தன்வயிற்றிடைப் பிறங்குறும் உணவைத்,

14. தான்எனப் பிறி(து) இன்மையாய்க் காணுதல் போல,
ஞானம் எய்திய யோகியர்க்(கு) இறைவனும் புருஷன்
நான்எனும் பரிபூரண எண் கவளித்த(து)
ஈனம்ஆர் அகிலத்தினைத் தான் எனக் காண்பான்.

**ஆத்மாவே ஈசுவரனும் ஜீவனும்**

15. சொற்பனத்திலே நிருபன் ஆய்ப், போகங்கள் சுவைத்து,
முற்படும் சதுர் அங்கத்தின் மொய்ம்பினை அடைந்து,
தற்பகைத்துறும் சத்துருதனைக் களத்(து) அழித்துப்,
பிற் பராஜிதனாகிக், கான் பிறங்குற ஏகி,

16. தவம் புரிந்ததாத் தன்மனத்(து) ஒரு முகூர்த்தத்தே
அவம் பெறக் கனாக் காண்டலின், முதல் அவஸ்தையினும்,
நவம் பெறும் மனோராச்சிய(ம்) நடத்துவான் ; கால(ம்)
நிவம்பெறு நதிப் பெருக்கினால் நீண்டதன் ஆயுள்

---

12. இச்செய்யுள் மாண்டூக்ய உபநிஷத்துக்குக் கௌடபாதர் செய்த காரிகை [1. 16] மேற்கோள். சுரேசுவராசாரியா ரெடுத்தாண்டது.

13. யோகம் தரு நிதித்தியாசனம் என்றது யோகாப்பியாசத்தை.

14. ஞானம் எய்திய.........புருஷன் என்றது பக்குவப்பட்டுச் சிறந்த யோகியை, யோகீசுவரன் என்று வடமொழி மூலத்துள்ளது.

7 முதல் 14 வரையிலுள்ள செய்யுட்கள் முதல் வினாவுக்கு விடை.

15, 16. ஸ்வப்நத்தைக் காட்டி, மாயையால் ஒரே ஆத்மா ஜீவனும் ஈசுவரனு மாவதை விளக்குகிறார்.



17. குறுகி வீவதன் தன்மையைக் குறிக்கலன். மேகம்
கறுவி மூடும் ஆதவன் என, மாயைதான் கடிது
நிறுவு(ம்) மோகத்தின் மிகுதியால், நெடும் பரமேசன்
மறுகித் தோற்றுவான் வலிமதி சிறுத்தவன் எனவே.

18. தன் திறத்தினால் ஒருபொருள் எப்பொழு(து) அமைப்பான்,
முன்னுறத் தெரிந்துணருவான், அப்பொழு(து) எல்லாம்,
மன்னன் வித்துவான் செல்வவான் என மகிழ்வோடு
பன்ன நிற்பனால் அப் பரமேச்சுரன் றானே.

**ஈசுவரன் எல்லாவற்றினுள்ளுமுள்ள ஆத்மா**

19. ஆதலால் உயிர்க்கண் எலாம் கிரியை ஞானங்கள்
ஓதுமாறு சார்ந்துள்ளன ; உவை சிவம் ஒன்றால் :
வாதுதீர் இறைவன்மையும் ஜீவர்கள் மாடே
கோ(து) இலாவகை அமைந்ததாக் கொள்ளுதல் முறையே.

**ஈசுவரனது ஞானம் ஒன்று, ஸ்வயம்பிரகாசமானது**

20. “இதுகுடம் ; இதுபடம்” என இயம்பு பல்உணர்வில்
கதும்என்(று) அவ்ஒளி, ஆதவன் பிரபையே கடுப்ப,
விதுவொடும் சுயம்ஆகவே விளங்குறும். ஞானம்
பதிவ(து) இல்லையேல் உல(கு)இருள் மூடியே பழகும்.

**ஈசுவரனது கிரியை**

21. அவனிடம் செயல் அணுவெனு மில்லையேல், பவஞ்ச
விவகரங்கள் இங்(கு) எங்ஙனம் மேவுறும் ? கிரியை
தவழ்தல் மாறுதல் வடிவமாய்ச் சாருறும் ; வெளியே
தவழுபோழ்து ஞானம்அதன் முளைஎனத் தலைஆம்.

---

17, 18 மாயாவசத்தால் ஈசுவரனே ஜீவாத்மாவாக அழைக்கப்படுகிறான். ஆத்மா ஸ்வதந்திரனா யிருக்கும்போது ஈசுவரனாகிறான். அதனால் ஈசுவரன் ஆத்மா இரண்டும் உபாதிபேதத்தால் காணப்படும் ஒரு வஸ்துவே.

19. எரியும் இரும்பு நெருப்போடு ஒன்றுபட்டிருப்பது போலவே ஜீவர்கள் சிவத்தோடும் ஒன்றுபட்டுள்ளனர். அதனால் சிவனாகிய ஈசுவரன் பரமாத்மா அல்லது ஸர்வாத்ம னாகிறான்.

21. உருவமற்றவனாயினும் ஈசுவரனிடம் கிரியை உண்டு, அவன் சிருஷ்டிகர்த்தா எனப்படுதலின். அக்கிரியைகளை அடுத்த செய்யுளில் காண்க. தலையாம் - வெளிப்படும். விவகரங்கள், வியவகாரங்கள்.

22. ஆக்க,லோ(டு) இவண் அடைகுதல், தூய்மையின் அமைத்தல்,
நீக்கி மாற்றுதல், எனும்இவை நினைத்திடின், தொழிலாம்.
ஆக்குகின்றனன், அடைகிறுன், தூய்ப்படுக் கின்றுன்,
நீக்குகின்றனன், எனப் புலன் தெரிவுறும் நிலத்தே.

ஈசுவரனும் ஜீவனும் உபாதிபேதம்

23. பிரமன் ஆதியர் உடலினில் பேர் உணர்வினன் ஆய்ப்
பரமனுகிய சிவன் விளங்குறுவனுல்; பகரும்
சுரர் நரர் திரியக்கெனு மிவற்றின் சிற்றுணர்விற்
பரவுவான், பல தாரதம்மியத்தினிற் பரிந்தே.

24. பைப்பிறப்பது, முட்டையிற் பிறப்பது, வியர்வை
மெய்ப்பிறப்பது, நிலத்தினிற் பிறப்பது, பேசின்,
மைப்பிறப்பினில் நிரல்நிரை தாழ்ந்த நால் வகைய
மெய்ப்பிறப்பென விளம்புவர் பிறப்புநூல் உணர்ந்தோர்.

பேதமெல்லாம் மாயையால் வந்ததே

25. பிரமனுதியாப் புல் இறுவாய் உள அவைதாம்,
வரைபடாத பேரொளிப் பரமாத்துமா தன்னைத்
தரையில் நேர்பெற உணர்ந்தபோ(து), ஒருவன்றன் கனவில்
உரைபெறும் பொருள்நேரக், கற்பனை யென ஓடும்.

26. 'அணுவினுள் அணுஆகியே மஹத்தினின் மஹத்தாய்'
எனுவ(து) என்பது வேதவாக்(கு); உருத்திரோபநிஷத்(து)
அணுவனுகிய சிவனவன் ஆத்துமா ஆக
எனும்உயிர் எலாவற்றினும் ஆகின்றுன் எனுமே.

27. இறைவன், நற்குரு, ஆத்துமா என்னு(ம்) முப்பெயரின்
அறைய, மூர்த்தி பேதத்தினுல் நிற்ப(து) யா(து), அந்த
முறையின், வ்யோமமே எனப்பரந்(து) உறைதருமொய்ம்பின்
உறையும் மெய்யினன் தட்சிணு மூர்த்திக்கு நமமே.

முதல் உல்லாஸம் முற்றும்

---

22. உருவற்றதற்கும் உபாதிபேதத்தால் கிரியையுண்டு. நான்காவது உல்லாஸம், 7, 8 செய்யுட்களைப் பார்க்க.

24. ஜராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பீஜம் என்பன.

25. ஓடும் - மறையும். 26 சுவேதாசுவதர உபநிஷத் 3-20.

26. அணுவனுகிய - அணுவுக்குள் அணுவாய்க் காணப்படும். சிவனவன் - சிவனே; அவன் தற்பொருட்டு.

27. நமம் என்றது சீடனும் குருவும் ஒன்று, ஜீவனும் சிவனும் ஒன்று, ஆத்மாவும் பரமாத்மாவும் ஒன்று என்று பாவித்துத் தன்னை அப்பரமாத்மாவி



## 2 - வது உல்லாஸம்

### ஆத்மா உபாதான காரணம் என்பது

2. வித்தினுள் முளைபோல் வேற்றுமை இன்றி
விளங்கிய ஜகம்இது மாயை

---

வைசேஷிகரது அணுவாதம்

1. ஒன்றுசேர் பரமாணுக்கள் உலகத்தின் முதலாய்த்
துன்று காரணம்; ஆதலின் குடம் மண்ணே(டு) ஒருங்கே
ஒன்றி நிற்பதாம், குணத்தொடும் விளங்குறும் இறைவன்
தன்திறத்தினில் பொருந்தி வீ(று) எய்துதல் இன்றே.

2. உருவமும், சுவைஆதிய குணங்களும், அணுக்கண்
மருவி உள்ளன ஆதலின், காரியப் பாட்டில்
ஒருமைசார் இனப் பல் குணம் அமைவுற உளுற்றும்.
அரிய காரியம் எதனிடத்(து) ஒன்றி ஆர்ந்ததுவோ.

வைசேஷிகரது முவ்வகைப்பட்ட காரணங்கள்

3. நீக்கம்இல் அதுவே சமவாயி காரணம்ஆம்;
ஆக்குதற்(கு) உறும் சக்கரம் ஆதிய கருவி
தேக்கு(ம்)நீர்க் குடக்(கு) எய்(து) உபாதானமாச் செப்பார்.
ஒக்கமோ(டு)எது காரியப்பாட்டினில் வலித்தாய்

4. முதற் கருவியில் நின்றிடும், அல்ல(து) அவ்வகையே
முதற்கருவியைச் சார்ந்(து) எழில்அடைந்திடும், அதுவே,

---

னிடத்தே அர்ப்பணம் செய்தலாம். தக்ஷிணாமூர்த்தி என்ற பதத்துக்குப் பல பொருள் கூறுவர்: (1) கல்லாலடியில் ஸநகாதி நால்வருக்கு ஞான உபதேசம் செய்த அவஸரத்தில் காணப்படும் மூர்த்தம். (2) இச்சாசக்தி, கிரியா சக்தி, ஞானசக்தியோடு கூடிய ஸத்து, சித்து, ஆனந்த ரூபமாகிய சிவம். (3) தன்னைத்தானுணர்ந்து அநுபூதி பெறுவதற்கு ஏதுவான ஞானமய சிவம் என்பன சிலவாம்.

1, 2. பரம அணுக்கள் சேர்ந்து உலகம் ஆயிற்று. குடம் மண்ணின் தன்மையையே விளக்குவது. அதனால் ஈசுவரன் உபாதான காரண மல்ல வென்பது வைசேஷிகரது மதம்.

3, 4, 5. இரண்டாவது செய்யுளின் நான்காவது அடியிலிருந்து சமவாயி காரணம் அல்லது உபாதான காரணம், அசமவாயி காரணம், நிமித்த காரணம் இவை சொல்லப்படுகின்றன.

மெத்து கற்பனைஆம் இட(ம்)ஒடு காலம்
மேவிப் பல் விசித்திரம் ஆயிற்(று);

முதற்கருவிஅல் அசமவாயீ எனமொழிவர் ;
முதற்கருவி நூல் ; அசமவாயீ, நிறம், இயைபே.

5. நிமித்த காரணம் இவற்றினுக்(கு) ஈசன்ஆம், குயவன்
நிமித்த காரணம் குடத்தினுக்(கு) என்னலின் ; நேடின்,
துமித்த மண்ணினில் தோண்டியும், நூலினில் உடையும்,
அமைத்த மோதிரம் பொன்னிலும் அடங்கலின், என்ப.

**சாங்கியரது மதம்**

6. ஓதுகின்ற வைசேஷிகர் நியாயரும் உரைக்கும்
பேது(உ)ரையினைக் கூறினும் ; சாங்கியர் முதலோர்
தீ(து)இல் ஸத்துவம் இராஜஸம் தாமஸம் எனமுக் [என்பார்.
கோ(து)இல் வெண்மை, செம், கருமைய குணங்கள் உண்(டு)

7. விளக்கம்உற்(று) உயிர் நிலைப்பிப்பது, அன்றியும், அசைந்தே
அளக்கர்சூழ் அகிலங்களும் படைப்பது, மறைத்தே
அழிக்கும் ஆற்றல(து) ஆகும் இப் பகுதியின் குணமே [வாம்.
அழித்(து)அளித்(து), இயற்றிடும்என்பர் ; அவர்இழி(பு) அறை

சமவாயி காரணம் என்றாலும் உபாதான காரணம் என்றாலும் ஒன்றே. குடத்துக்கு மண்ணும், துணிக்கு நூலும், மோதிரத்துக்குப் பொன்னும் சமவாயி காரணமாம். இக்காரணத்தோடியைந்தது அசமவாயி காரணம் அல்லது பிரிக்கக்கூடிய காரணம். துணிக்கு நிறமும் குட மோதிரங்களுக்கு உருவமும் போல. நிமித்த காரணம் குயவன்போல. இதனோடு எண்ணப் படுவதாகிய துணைக்காரணம் தண்ட சக்கரங்கள்போல. இவ்வளவும் வைசேஷிகர் நையாயிகர்களது மதம்.

6, 7 சாங்கியர் முதலோர் என்றது ஸாங்க்யர், ஸ்வபாவ வாதிகள், சூன்ய வாதிகள், சைவர்கள், பௌராணிகர் இவர்களே. வார்த்திகக்காரர் காலத்து வைஷ்ணவரென்ற தனிவகுப்பினரின்மையால் இப்போது விசிஷ்டாத்துவைதிகளாகிய வைஷ்ணவர்களையும், துவைத வாதிகளாகிய மாத்துவர்களையும் கொள்ளலாம். ரஜஸ், சிவப்பு, அசைவுள்ளது ; ஸத்வம் வெளுப்பு, பிரகாசமுள்ளது ; தமஸ், கறுப்பு, மறைப்பது ; இவை மூன்றும் முறையே படைத்துக் காத்து அழிப்பதாம். இவை பகுதி அல்லது பிரகிருதி அல்லது பிரதானத்தின் குணங்களாம். ஸாங்கியர் மதப்படி நிமித்தகாரணனாகிய சித்பொருள் ஒன்று அவசியமில்லை.



இத்தகை உலகை மாயவான் யோகி
இவர்என, இச்சையால் தோற்று

**பரமாணுவாத மத கண்டனம்**

8. முளைமுதல் பழம் ஈறதாம் காரியம் முழுதின்,
உள(து) எனும் பொருள் ஒன்றுமே கொள்ளுதற்(கு)உற்ற(து);
இளம்தளிர், கிளை, பூ(ப்), பிஞ்சு, கனிமுதல் கணங்கள்
வளம்பெற வடவித்தின் எங்(கு) இருந்து வந்தனவே ?

9. ‘காரணத்தினுள் காரியம் அடங்குறும்’ என்ப(து)
ஏரணத்தினோர் யாவரும் ஒத்ததாம் ; இதனால்
சாரநின்றன உண்மையும் விளக்கமும் இவையே ;
ஓரின், அன்னவை உறைவ(து) ஏது, அது முதற்கருவி.

10. புட்பம் தீஞ்சுவைப் பழம்எனும் நிலையினைப் பொருந்திக்
கட்படும் ஒரு கணத்தினும், பால் தயிர்ஆகும்
அப்பொழுதினும், அவற்(று) உருவம் சுவை வே(று) ஆம் ;
பெட்புறுவதே அன்றி ஓர் இனம் எனல் பெறுமோ ?

8. முளைமுதல் பழம் வரையில் ஸத்து (உள்ளது) என்ற ஒரு காரணமே அறியப்படுவது. அதனால் அணு உபாதான காரணம் அல்லது முதற்கருவி என்று சொல்லலாகாது. ஓரணு, ஈரணுவாய், மூன்றணுவாய்மாறி முளை, செடி, பூ, காய், பழமாயிற்று என்று சொல்லுவதற்கில்லை. உபாதான காரணம் என்பது முதற்கருவி அல்லது மூலாதாரமான காரணம் என்னினும், மரம்வேண்டுவோன் விதையைத் தேடுவானேயன்றி அணுவைத் தேடான். அற்றேல் விதை முதற்காரணமேயன்றிப் பரமாத்மா அல்லவென்று வைசேஷிகன் வாதிக்கலாம். அந்தப் பட்சத்திலும் அணுவுக்குள்ள மூலகாரணத்துவம் ஒழிந்ததேயாம். அந்த வித்தே பிரம்மத்தினது மாயைத் தோற்றமென்பது பிரம்மவாதிகளின் மதமானது பற்றி ‘ஸத்து’த்தான் மூலகாரணம் என்பதே பெறப்பட்டது. இதனால் அணுவாதியின் மதம் நிராகரிக்கப் பெற்றது. வடவித்து, ஆலமர விதை.

9. “காரண அநுகதமானது (அல்லது காரணத்தை ஒட்டிச் செல்வது தான் காரியம்) காரியம்” என்ற வாக்கியத்தின்படி சித்தின் விளக்கத்தினால் சத்தாக ஒவ்வொரு சிருஷ்டியும் தோன்றுகிறது. அதனால் சுயம்பிரகாசம் வாய்ந்த ஸத்தே எல்லாவற்றிற்கும் உபாதான காரணம் ஆம்.

10. பூவும் பழமும், பாலும் தயிரும் பண்பினால் வேறுபட்டன. அதனால் காரணம் போன்றது காரியம் என்னும் வைசேஷிகர் மதப்படி பழத்துக்குப் பூவையும், தயிருக்குப் பாலையும் உபாதானகாரணமாகச் சொல்ல இயலாது.

வித்திடும் அந்தத் திருக்குரு மூர்த்தி
தக்ஷிணா மூர்த்திக்(கு)இந் நமமே.

---

### விவர்த்தக் கொள்கை

11. காரணத்துடன் காரியம், சாதியும் பொருளும்,
தாரெணும் அவயவம் அவயவி, குணி குணமும்,
ஆரும் நல்வினை வினைமுதல் அவைகளும், விளக்கும்
ஓரும் ஒன்றற்கே விவர்த்தமாய் உறுவ(து) என்(று) உணர்க.

### அறிவும் செயலும் சேதனத்தையே சார்ந்தவை

12. அறிவெனும் குணம், பகுதிக்கும் சிற்றணு வினுக்கும்
உறைதல் கூறிலர், சகத்தினைப் படைப்பதில், உணர்வோ(டு)
இறைமை கொள்ளும் சேதனத்தினுக்கே செயல் அறிவும்
முறைமையோ(டு) உள ஆகக் கண் உறுவதை மொழிவர்.

13. காலரூபம் என்(று) அறைதரும் கிரியையின் வலியால்
பாலினின்று நல்தயிர் பரிணமிக்கின்ற(து) ; உலகம்
ஏல ஞாதுரு ஞானமே ஞேயம் என் உருவக்
கோலம் எய்துதல் ஞானத்தின் வலிஎனக் கூறுய்.

---

11. விவர்த்தம் = மாயை. கயிறு கெடாது பாம்பாக விளங்கும் பொய்த் தோற்றம். மாயை என்றது சூடும் தீயும் ஒன்றே வேறே எனச் சொல்லவாராததுபோல இன்னதென்று சொல்ல வாராத பொய்மையாம்; ஆனது பற்றி அது ஒரு தனிப் பொருள் அல்லவென்று உணர்க.

12. பகுதி, ப்ரகிருதி, பிரதானம் என்பன ஒரு பொருட் சொற்கள். சாந்தோக்கிய உபநிஷத்து 6 - 2-ல் சிருஷ்டி சித்தோடு கூடிய ஸத்திலிருந்தே உண்டாகிறதென்று சொல்லப்பட்டிருக்கிறது. பரமாத்மாவே உலகமாக மாறுகிறுன். இச்சா மாத்திரத்திஞல் இவனே ஜகத் சிருஷ்டிக்கு உபாதான காரணமும் நிமித்த காரணமுமாகிறுன். அவனுடைய மாயாசக்திக்குள் காரணகாரிய சம்பந்தமுள்ள ஜகத்தின் சக்தி முழுவதும் அடங்கியுள்ளன.

13. கிரியையின்வலி = கிரியாசக்தி ; ஞானத்தின்வலி = ஞானசக்தி; பால் தயிராவதற்கு ஞானவாஞகிய ஒரு ஏது வேண்டுவதில்லையானது பற்றி உலகத்துக்குச் சிருஷ்டி கர்த்தா வேண்டுவதில்லை என்பது சாங்கியரது மதம். இதை மறுத்து வேதாந்தி சொல்வது இது :—பிரஹதாரண்ய உபநிஷத்து 5–7–15-ல் சொல்லியபடி, ஈசுவரனே தனது கிரியா சக்தியிஞல் காலரூபமாக நின்று பாலைத் தயிராக்குகிறுன். பால் தாஞகவே தயிராதல் முடியாது. அற்றேல் பால் எப்போதும் தயிராய்க்கொண்டேயிருக்கும். ஈசுவரன் அநாதி மாயையால் சிருஷ்டி காலத்துச் சிருஷ்டியில் அமையவேண்டிய அவ்வளவையும் தன் கருத்தில்



### ஸவிகல்ப நிர்விகல்ப ஞானங்கள்

14. அந்த ஞானமும் இருவகைத்(து) ஆகும் ; நிர்விகற்பம்
அந்தமாய்ப் பொருள் விளக்குறும் ; சவிகற்ப ஞானம்
நந்து நாமமும் பிறவுமே தோற்றுவிப்பதஞல்,
அந்தம்இல் பல வகைப்படும் என்பதை அறிக.

15. துணிவொ(டு) ஐயமு(ம்) மயக்கமு(ம்) நினைவொ(டு) ஒப்புமையும்
அணிகொள் நிச்சய ஊகங்கள் துணிவின்மை அவையும்
நுணுகி நோக்கிடின் உவையொத்த அநுபவம் பிறவும்
பிணிகொண்(டு) ஆட்டுவ பேதம்இல் ஞானத்தைப் பலவே.

### அளவைகள் 8

16. சாருவாகர்கள், 'கண்டதே காட்சி' என்(று) அறைவர் ;
தேரிடின், அநுமானத்தைச் சேர்ப்பவர், கணுதன்,
ஏரின் ஞானமார் சுகதனும் ; இவற்ருெடு சப்தம்
நேரிற் கூட்டுவர், சாங்கியர், நியாயர் ஓர் சாரார்.

17. உவமையும்கொளல் ந்யாயர் யாவரும் ஒத்த துணிபாம் ;
அவம்இலா அருத்தாபத்தி அணைக்குவன் பிரபன் ;
தவம்இல் பட்டனும் அபாவத்தைத் தக்கதாக் கொள்வான் ;
கவனம்ஆக இவ் ஆறையும் கருதும் வேதாந்தி.

---

கொள்கிருன். அதுவே ஞானசக்தி. இம்மாயையாகிய ஞானசக்தி ஈசுவரனேடு கலந்து அறிவாகவும் உலகமாகவு மாகிறது.

14. நிர்விகற்ப ஞானம், வஸ்துவைமட்டும் விளக்குவது. ஸவிகற்ப ஞானம், நாமம் ரூபம் ஆகியவற்றைத் தெரிவிப்பது.

15. ஸவிகற்ப ஞானத்தின் பல பேதங்கள் கூறப்பட்டன.

16, 17. சாருவாகனும் லோகாயதனும், காட்சிப் பிரமாணம் ஒன்றையே கொள்வர். கணுதன் வைசேஷிக மதஸ்தாபகன். ஸுகதன், புத்தன், க்ஷணிக விஞ்ஞானவாதி. சாங்கியர், கபிலர் மதத்தையும், பதஞ்சலி மதத்தையும் பின்பற்றுவோர். கௌதமரது கொள்கையைப் பின்பற்றும் நையாயிகர் உவமையை ஓர் அளவையாக எண்ணுவர். பிரபன், பிரபாகரன் என்பதன் சுருக்கம். பிரபாகரனும், பட்டனும், ஜைமினியினது கர்ம மீமாம்சையை இருவகை யாக்கி நடத்தியவர்கள். வேதாந்திகள் சாரீரக மீமாம்சையை வகுத்த பாதராயணனைப் பின்பற்றுவோர். இம் மீமாம்ஸையே பிரஹ்ம ஸூத்திரமாவது ; பிரஹ்மத்தின் தன்மையைத் தெரிப்பது.

18. ஸம்பவத்தொடும் ஐதிகம் எனப் புராணிகர்கள்
வம்பு கூறி எட்(டு) ஆக்குவர் ; வழங்கும்இவ் அளவை
தம்பொருட்களைத் தமிழினில் விளக்குவம், சுரேசர்
பம்பும் இன்னவை விரி(வு) அஞ்சிப் பகர்ந்திலர் எனினும்.

19. ஐம்பொறிகளும் பொருள்உற அணைவது காட்சி ;
நம்புதீ உடைத்(து) இம்மலை எனல் அநுமானம் ;
இம்பரில், சப்தம் வேதவாக்(கு) உண்மையே என்பர் ;
அம்பை ஒத்தது கண்எனல் உவமை என்(று) அறைவர் ;

20. பகல்உணுன் பருத்(து) இருப்பவன் இர(வு) உணுங்கொள்கை
இகம்உறும் அருத்தாபத்தி ; ' இன்மையால் இல்லை
வகைபெற இது ' எனச்சொலல் அபாவம் என்(று)அறிக ;
தொகைபெறும் சதத்(து) ஐம்ப(து) உட்கொள்ளல் சம்பவமே ;

21. இம்மரத்தினில் பேய்உள(து) என்னல் ஐதீகம் ;
செம்மையின் அளவைப் பொருள்செப்பினும். கணுதர்
அம்மைசெப்புவர், திரவியம், குணம், தொழில், பொதுமை,
தம்மின் வே(று)உறு விசேடம், சம்பந்தம் என்(று)ஆறே.

### வைசேஷிகரது 6 பதார்த்த விளக்கம்

22. திரவியங்கள் ஒன்பான் ; அவை, பூதமும், திசையும்
விரவு காலம், ஆன்மா, மனம் என்பவாம் ; குணங்கள்,
உருவம்ஆதிஐந்(து), அள(வு)(ஒடு), எண், சேர்க்கையும், பிரிவும்,
பரவு வேற்றுமை, திண்மையும், நெகிழ்ச்சியும், பரமும்.

---

19, 21. இச்செய்யுட்கள் வார்த்திகக்காரரது சுலோக மொழிபெயர்ப்பு அன்று எனினும் இந்நூலுணர்ச்சிக்கு இன்றியமையாதன. காட்சி முதலியவை பிரமா என்னும் நல்லுணர்ச்சிக்கும், பிரமாணம் என்னும் உணரும் கரணங்களுக்கும் பொதுவாகக் கூறப்படும். 21-வது செய்யுளின் பின்பகுதி வைசேஷிகரது பதார்த்தங்கள் ஆறையும் உரைத்தபடி. ஐதிகம் இடை நீண்டது.

22, 23. திரவியம் முதல் ஆறிலும் திரவியம் 9 ஐயும் குணங்கள் 24 ஐயும் விளக்குகிறார். பூதம் 5, திசை, காலம், ஆன்மா, மனம் ஆகத் திரவியம் 9. பூதம் ஐந்தாவன. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பன. உருவம் ஆதி ஐந்து சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தம் என்பன. பின்மை, அபரம். தியம் = புத்தி. வாஸனை என்றாலும் ஸம்ஸ்காரம் என்றாலும் ஒன்றே.

குணங்கள் 24 ஆவன : சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம், பரிமாணம், ஸங்கியை, ஸம்யோகம், விபாகம், ப்ருதக்த்வம், குருத்வம், த்ரவத்வம், பரத்வம், அபரத்வம், ஸ்நேஹம், ஸம்ஸ்காரம், தீ (ஞானம்), த்வேஷம், ஸுகம், துக்கம், இச்சை, தர்மம், அதர்மம், பிரயத்தனம் என்பன. இவற்றைச் செய்யுளோடு ஒப்புநோக்கிக் கொள்க.



23. பின்மை, நட்பு, வாஸனை, தியம், வெறுப்பு, இன்ப, துன்பம்,
நன்மைஆர் அறம், பாபமும், விருப்(பு) ஒ(டு), முயற்சி
என்னும் நால்அறு வகையஆம். வாஸனை, வேகம்,
மன்னும் பாவனை, நிலைபெறுத்துகை என மூன்றே.

### வாசனையின் முத்திற விளக்கம்

24. அம்பின் நல்கதி வேகம்ஆம் ; அனுபவித்தது கண்
(இம்பரிற்) பட, நினை(வு) உறப் பாவனை இயையும் ;
கொம்பினை வளைத்(து)இழுத்தபின் விட்டிடின், தனது
முன்புறு நிலைஅடைவது நிலைபெறுத்துகையே.

### தொழில் ஐந்து

25. எழுதல், வீழுதல், நடைகொளல், விரி(வு)ஒ(டு), சுருங்கல்,
மொழிவர் ஐவினை அறிஞர்கள் இருவகைப் பொதுமை ;
பழகு ஸத் தெங்குந்தொடர், பரப்பொதுமைஒன்(று) ; அன்றி
வழிகொள் அபரஸாமானியம் பொருள் குணம் ஆதி.

### விசேஷ சமவாயங்கள்

26. எண் இறந்தன விசேஷங்கள் வேற்றுமைக்(கு) இயம்பும்
உண்மைக் காரணம் ஆகுமால் ; தோண்டியின் உருவில்
திண்மையாக என்றும் உள சம்பந்தம் செப்பின்
வண்ணம்ஆர் சமவாயம் என்(று) அறைகுவர் மதியோர்.

---

24. நிலை பெறுத்துகை = ஸ்திதி ஸ்தாபகம்.

25. விரிவொடு சுருங்கல் என்பது நிமிருதல் வளைதல் என்பாரும் உளர். பொதுமை = ஸாமான்யம் : பரஸாமான்யம் (பரப்பொதுமை) அபரஸாமான்யம் என இருவகை. பரஸாமான்யம் ஆவது ஸத்தாவைப்போல் எங்கும் இருந்து தன்னை மற்றவை ஒட்டிப் பின்தொடர நிற்பது. அபரஸாமன்யமாவது திரவியத்துவமும் (பொருட்டன்மையும்) குணத்துவமும் முதலானவற்றின் பொதுமையாம். பொருள் குணம் ஆதியை வழிகொள்ளும் கீழ்ப்பொதுமை இரண்டாவது என்க.

இச்செய்யுளுக்கே இன்னொரு பாடம் உண்டு.

" எழுதல் வீழுதல் நடைகொளல் நிமிருதல் வளைதல்
அழகின் ஐவினை ஆகும் என்று அறிஞர்கள் அறைவர் ;
பழகும் உண்மையே எங்கணும் தொடர்ந்த மேற்பொதுமை
வழிகொள் அபரசாமானியம் திரவியம் குணமே "

26. விசேஷங்கள் கணக்கிலடங்காதவை. இவை வ்யாவ்ருத்தி ஞானத்திற்குக் காரணமானவை. இவ் விசேஷங்கள், மனம், ஆன்மா, காலம், திசை

### திரவியம் 9-இன் நித்திய அநித்தியத் தன்மைகள்

27. காலம், வான், திசை, கருதுறும் ஆத்துமா இவைதாம்
சால எங்கணும் பரந்துள, என்றைக்கும் உளஆம்.
நாலெனப் பகுக்கப்பெறும் பரமசிற் றணுக்கள்
ஏலும் நித்தியத் தன்மையை ; மனமும் இவ்வகைத்தே.

### ஈசுவர ஸாங்கியரது தத்துவங்கள்

28. இந்த ஆறினைப் பொருள்என விசேஷகர் உரைப்பர்.
நந்தும் ஈசுவர சாங்கியர் நவில்வர் மாயையினை
முந்து முக்கியம், அவ்யக்தம், அவித்தை, அஞ்ஞானம்,
அந்தம், அக்ஷரம், பகுதி, அவ்யாக்ருதம், எனவே.

### தாமஸாஹங்காரமும், ஸாத்விகாஹங்காரமும்

29. மாயை ஈசன்றன் அறி(வு) எதிர் உரு அணைந்ததனல்
ஏயும், காலமும், புருஷனும், மகத்(து)எனும் பொருளும் ;
தோயும் மானில் ஆங்காரம் ; ஐம்பூதமும் தமஸின்
ஏயும் ஆணவத்(து) உதித்தன ; வான், வளி, தீ, நீர்,

---

இவற்றில் தங்கியுள்ளவை. அவை பிருதிவி, அப்பு, தேயு, வாயுவின் பரமாணுக்களாம். சமவாயம் எனினும் சம்பந்தம் எனினும் ஒன்றே. பொருளும் சினையும், பொருளும், குணமும், வினையும் வினைமுதலும், ஜாதியும் தனிப்பொருளும், நித்தியப் பொருள்களும் விசேஷங்களும் எனச் சம்பந்தப்பட்ட இவந்துவங்களாம்.

27. வான், ஆகாசம் (ether). நாலு பரமாணுக்களாவன, பூமி, நீர், தீ, காற்று இவற்றின் சிற்றணுக்களாம்.

28. வைசேஷிகரது ஆறு பொருள்கள் ஆவன. கணாதர் கூறியுள்ள திரவியம், குணம், தொழில், ஸாமான்யம், விசேஷம், ஸமவாயம் என்பனவாம். மாயையின் மறுபெயர்கள்: பிரதானம் (முக்கியம்), அவ்யக்தம் (வெளிப்படாதது), அவித்தியா (மூடம்) அஞ்ஞானம் (அறிவின்மை) அக்ஷரம் (அழியாதது), அவ்யாக்ருதம் (பேதப்படுத்தப் படாதது), பிரகிருதி (பகுதி அல்லது மூலகாரணம்) தமஸ் (அந்தம் அல்லது இருட்டு) என்பனவாம்.

29. பிரஹ்ம சைதன்யம் மாயையிற் பிரதிபிம்பித்தலால் முத் தத்துவங்கள் எழுந்தன. அவை, காலம், புருஷன், மகத் என்பன. காலம் பிரகிருதியின் குணங்களை மாற்றுவது. காலத்தின் வன்மையால் பிரகிருதியானது மகத் அல்லது அறிவு ஆகப் பரிணமிக்கிறது. இம்மகத் தத்துவத்திலிருந்து ஜீவர்கள் அல்லது புருஷர்கள் உதிக்கின்றனர். அவர்கள் தங்கள் மேலேற்றத்துக்காகச் சிருஷ்டி யுருவங்களை ஆவிர்ப்பவிக்க வேண்டியவர்களாகிறார்கள். மகத் தத்துவத்திலிருந்து அகங்காரம் உண்டாகிறது. இவ் வகங்காரம், ஸாத்வித அகங்கா



30. பூமி இன்னவை ; ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்
ஓம்எனு உதித்(து) இந்தியம் உணர உற்றனவால்,
தாமும் பூதத்தின் தன்மையாச் சாற்றுற நின்றே ;
ஏம தேவதை ஸதாசிவன், ஈசன், (ஒடு) இயம்பும்

31. உருத்திரன், திருமால், (ஒடு) நான்முகன் உரைப்பர்.
அருத்தியோ(டு) அகக்கரணமும் ஞானஐம் பொறியும்
பெருத்த ஸாத்விக ஆணவத்தினின் வெளிப்பிறங்கும் ;
திருத்தம்ஆர் அகக்கரணம், எண், மதி, அகங்காரம்,

32. சித்தம் என்பன ; ஐயம் நிச்சயத்தொடு செருக்கும்
ஒத்த எண்ணமும் விஷயம்ஆம் ; உவற்றின் தேவதைகள்
சுத்த வெண்மதி, பிரஜைகள் நாயகன், உருத்ரன்,
இத்தரைக்கண் ஓர்இடம் அறி கேத்ரஞன் என்ப.

33. காது மெய் கண் நா மூக்(கு)இவை கருதிடின் ஞானம்
ஓதும் ஐம்பொறி ; திக்(ஒடு), வாதம். என்றாமும்
மோது பாபங்கள் நீக்கிடும் வருணனும், முழுதும்
ஓதுகின்றமெய் அசுவினித் தேவரும் இறைவர்.

34. கன்ம ஐம்பொறி(ஒடு), கால், ராஜஸாங்கார
ஜன்மம் உற்றன ; வாய்,கை,கால், பாயு, சார்குறிகள் ;
தன்மம்ஆகும் பேச்சு, எடுப்பு(ஒடு), செலவு(ஒடு), விடுப்பும்,
இன்பம் ஆர்தலும் ; தேவதை, வன்னி, இந்திரனும்

---

ரம், ராஜஸ அகங்காரம், தாமஸ அகங்காரங்களாக இருக்கலாம். ஆணவம், அகங்காரம்.

31. எண் - மனஸ் ; மதி - புத்தி.

32. மனத்துக்கு விஷயம் ஸந்தேஹம்; புத்திக்கு விஷயம் நிச்சயம்; அகங்காரத்துக்கு விஷயம் கர்வம்; சித்தத்துக்கு விஷயம் ஸ்மரணம் என்பவையாம். இவற்றிற்குத் தேவதைகள் முறையே சந்திரன், பிரஜாபதி, ருத்ரன், க்ஷேத்ரக்ஞன் என்பவர்களாம். தேவதைகள் என்றால் அவற்றுள் நின்று தொழில் புரியும் அறிவு மூலங்கள் எனக்கொள்க.

33. ஞானம் ஓதும் ஐம்பொறி - 5 ஞானேந்திரியங்கள். திக்தேவதை, வாததேவதை, சூரிய தேவதை என்க.

34. கன்ம ஐம்பொறி - 5 கன்மேந்திரியங்கள். கால் - வாயுக்கள். 2-வது கால் பாதத்தைக் குறித்தது. பாயு - ஆசனவாய். குறி - ஜனனேந்திரியம். கர்மேந்திரியங்களின் தன்மம் அல்லது விஷயங்கள் பேச்சுமுதல் ஐந்தாம். வன்னி, அக்கினி.

35. குறள்எனும் உபேந்திரன்(ஒடு), மிருத்தியு, பிரமன்.
அறைவர் காலினைப் பிராணன்(ஒடு), அபானனும், ஸமானன்,
நிறு(வு) உதானனும், வியானனும் என்ன ; ஸாங்கியர்கள்
அறிவர் நால்அறு தத்துவம், பூதங்கள் ஐந்தும்

### ஸாங்கியரது 24 தத்துவங்கள்

36. பொறிகள் பத்து(ஒடு), வாயு ஐந்(து), அகக் கரணங்கள்
நெறியின் நான்கு, இவை ; நிரீச்சுர ஸாங்கியர், மூலம்
உறைபகுதியும், மகத்(து), அகங்காரமும், தமஸின்
உறைந்து நேர்வரு மாத்திரை, அவற்றெ(மு) ஐம்பூதம்,

37. சத்துவத்தின் ஆம்ஆணவம் சனித்ததோர் கரணம்,
மற்றும் அங்கெழும் ஐம்பொறி, இராஜஸாங்கரத்(து)
உற்றஐங் கருமேந்திரி யங்களும், இருபான்
ஒத்தநான் கென்பர் ; புருஷனும் கூட்டுவார் ; உணர்க.

### பௌராணிகரது 30 தத்துவங்கள்

38. முப்பதாப் புராணிகர்சொலும் தத்துவம் மொழிவாம் ;
செப்பும் ஈசுரசாங்கியர் தொகையின், மான், காலம்,
ஒப்பும் முக்கியம், மாயை, பின் அவித்தை, நல்புருஷன்.
செப்பின் தத்துவம் ஆறு(ஒடு) முப்பதாச் சைவர்

35. குறள், வாமனன், உபேந்திரன் மூன்றும் ஒன்றே. ஸேசுவர ஸாங்கியரது 24 தத்துவம், பூதம் 5, ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, பிராணாதி வாயுக்கள் 5, அந்தக்கரணம் 4 ஆக 24 ஆம்.

36. நிரீசுவர ஸாங்கியரது 24 தத்துவங்களாவன: 1 மூலப்பிரகிருதி, 2 மகத், 3 அகங்காரம், 4 - 8 சப்தம் முதலிய தன்மாத்திரைகள் ஐந்து ; 9-13 பஞ்ச மகாபூதங்கள் ; 14 - 18 கர்மேந்திரியங்கள் ஐந்து ; 19 - 24 அந்தக்கரணம் ஒன்று ; ஞானேந்திரியங்கள் ஐந்து இவைகளாம். இவற்றுள், மூலப்பிரகிருதியிலிருந்து மகத் தத்துவமும், மகத்திலிருந்து அகங்காரமும், (தாமஸ) அகங்காரத்திலிருந்து பஞ்சதன்மாத்திரைகளும் வெளிவந்தவை. தன்மாத்திரைகளிலிருந்து பஞ்ச மகாபூதங்கள் உண்டாயின. ராஜஸாகங்காரத்திலிருந்து கன்மேந்திரியங்கள் வந்தன.

37. ஸாத்விக அகங்காரத்திலிருந்து அந்தக்கரணமும் ஞானேந்திரியங்களும் வெளிப்பட்டன. பிராணாதி ஐந்தும் இந்திரிய விஷயங்களேயாம். புருஷர் எண்ணிறந்தவ ராவர். காலத்துக்குத் தனிப்பட்ட நிலை இல்லை. நிரீசுவர ஸாங்கியர் புருஷனை இருபத்தைந்தாவது தத்துவமாகவும் கொள்வதுண்டு.

38. மான், மகத்தத்துவம் ; முக்கியம், பிரதானம், மூலப்பிரகிருதி; இதிலிருந்தே மகத்தத்துவம் வெளிவந்தது. மாயை ஈசுவரனிடத்துள்ளது ; ஈசு



### சைவாகம தத்துவம் 36

39. சொல்லும்ஆறு கேள் ;புராணிகர் சொல்லும் முப்பதனோ(டு)
ஒல்லும் பிந்துவும், நாதமும், சக்தியும், சிவனும்,
வெல்லும் சாந்தமும், அதீதமும் விளம்புவர் சேர்த்தே,
நல்ல கேள்வியின் கொள்கையை நவிலுவம் இனியே.

### வேதத்தின் மாயைக் கொள்கை

40. விகற்பம் யாவையும், வித்தினுள் முளைஎன, முதலில்
உகப்பின் ஆத்துமத்(து) உறைந்தன ; உவை, இச்சை, அறிவு,
சகத்தின்ஆம் தொழில் வடிவுள மாயையில் சிறக்க
இகத்(து) எதிர்ப்படல் ஆயின. காரியம் யாவும்,

41. இச்சை ஞானமும் முயற்சியும் என்(று) இவைமூன்றும்
நச்சி முற்றுவிக்கின்றன ; ஆதலின், நலக்க
மெச்சும் ஆர்உயிர் யாவும் ஈச்சுரர் என-மேவல்
நிச்சயம்பெற நின்றதால் ; பவஞ்சமே கார்யம்.

42. 'வித்தினின்று நல்விருட்சமும், விருட்சத்தின் வித்தும்,
ஒத்து மாறியே வருகின்ற' என்பவர் உணர,

வரனை மறைக்காது ; ஈசுவரனுக்குள்ளடங்கியது. அவித்தை ஜீவனிடத்துள்ளது ; ஜீவனை மறைப்பது. இதுவே மாயைக்கும் அவித்தைக்கும் பேதம். ஈசுவரன் அவ்யக்தத்தோடு கலந்து தொழிற்படுவதே காலமாம். புருஷன் பரமாத்மாவினது ஓர் அம்சம்.

39. பிந்து, ஸதாசிவதத்துவம் ; குணரஹிதமான வஸ்து. நாதம், பிரணவ ஸ்வரூபமாய் எல்லாவற்றையும் விளக்குவது. சக்தி, மாயைக்கும் அவித்தைக்கும் புறம்பாய் ஈசுவரனது ஆட்சிக்குக் கருவியாய் இருப்பது. சிவம், சக்திக்கு ஆலம்பமாய்ப், பக்தர்களுக்காக வேண்டுமென்றே உடலெடுக்கும் தத்துவம். சாந்தமும் அதீதமும் சிவத்தின் இரண்டு அவஸரங்களாம். மேற்கோள் : "இந்த அக்கினி உண்மையில் ருத்ரனே. அவனுக்கு இரண்டு சரீரங்கள் உண்டு ; ஒன்று உக்கிரமானது ; மற்றொன்று சாந்தமானது" என்று தைத்திரீய ஸம்ஹிதை (5-7-3) கூறும். மேலே சொன்ன பல்வேறுபட்ட தத்துவங்கள் ஒன்றுவது உண்மையானதல்ல. அவை மாயையால் பரப்பிரஹ்மத்தில் வெளித்தோன்றும் அவஸரங்களென்று சுருதி கூறுகிறது.

40 - 41. இச்சை, அறிவு, தொழில் ; இச்சை, ஞானம், முயற்சி இவை ஒன்றே. ஈசுவரனது இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி என்பவை இவையாம். இவை மாயாகாரிய முடிவாம். ஆனதுபற்றி இவற்றுல் தரப்படும் ஜகத் மாயையன்றி மற்றில்லையாம்.

உத்தமத் தவயோகியின் உதாரணம் உரைப்பர்.
சுத்தர், முன்னையோர், சமாதியில் பக்குவம் தோய்ந்தோர்.

43. கோசிகப்பெரு(ம்) முனிவரர் ஆதியர், கூறின்,
ஆசின், இச்சையின் முதல்துணை ஆதிய இன்றிப்,
பேசும் ஓர்பயன் கருதிடார், போகங்கள் பிறங்கும்
கா(சு)இல் நல்தலம் விண்ணினில் கண்டனர்; பிறவார்.

44. மட்டிலா வலி படைத்தவன் இறைவன்; ஆதலினால்
ஒட்டி ஒன்றையும் விரும்புறான்; உற்ற தன்வயன்ஆய்
எட்(டு)இரண்டு திக்(கு)உள்ளன யாவையும் படைத்துத்
தட்(டு)அற அவை காத்துப் பின் தட்டழித்திடுவான்.

45. நிர்விகாரிஆம் இறைவன் முத்தொழிலினை நிறுவல்
எவ்வகை எனின், சுயஒளி நித்யன்ஆம் ஈசன்
எவ்வெவற்றையும் காரகத் தொழிலினால் இயற்றான்,
அவ் வளவைசார் செய்கையால் அவற்றினை அறியான்.

46. அறிவும் செய்கையும் அவனது விகாரம்இல் இயல்பாம்;
பிறி(து) எவற்றையும் பிறங்குவான் பற்றிநிற்பன அன்(று).
அறிதி, அன்னவன் இச்சையின் விசித்திரம் அதுதான்
உறும், அவன்றன(து) இஷ்டத்தின் உளுற்றுறப் பெற்றே.

47. செய்யவும், செயா(து) இருக்கவும், வே(று)ஒன்று செயவும்,
ஐய, வல்லவன் ஆகும்; அவ் இறைவன்றன் சுயேச்சை
மெய்யின் யாவரே வரையறுத்(து) உரைத்திடும் மேம்பா(டு)
எய்யுறு வகை உற்றுளார்? இயம்புக அதையே.

---

42 - 43. கோசிகன் = விசுவாமித்திரன். பிறவார் என்றது தங்கள் சிருஷ்டிக்குள் தாம் ஒன்றாகப் பிறப்பதில்லை என்றபடி. வித்தும் மரமும் என்ற உதாரணம் பல ஈசுவரர்களையும் பல ஜகத்துக்களையும் குறிக்கலாம். அதனால் யோகியின் உதாரணம் காட்டப்பெற்றது. சுருதி ஈசுவரனுக்குப் பிறப்பு இறப்பு இல்லை என்னும். மேலும் ஈசுவரன் ஒருவனே; அவனே ஜகத் கர்த்தாவென்பதைக் காட்டவும் யோகியின் உதாரணம் எடுத்துரைக்கப் பெற்றது.

44, 45. ஈசுவரன் ஸ்வதந்த்ரன் ஆனதால் காரகங்களைக்கொண்டு சிருஷ்டிப்பதும் இல்லை; பிரமாணங்களைக்கொண்டு அறிவதுமில்லை. ஒரு அரசனைப் போலவும், காந்தத்தைப்போலவும் தன் எதிரில் தான் ஒன்றும் செய்யாமல் எல்லாம் தொழிற்படுமாறு செய்கிறான்.

46. அவனுடைய இச்சாசக்தியின் விசித்திரமே (நானாவிதத் தன்மையே) அவனுடைய பரிபூரண ஸ்வதந்திரத்தைக் காட்டுகிறது.

47. கர்த்ருத்வம், அகர்த்ருத்வம், அந்யதாகர்த்ருத்வம் ஈசனுக்கு உண்டு.



சுருதி வாக்கியம்

48. ஈசன் தன்னுடை இச்சையால் படைத்திடும் தொழிலைப்
பேசும், 'அன்னவன் பெட்புடன் விரும்பினான்' 'அந்த
ஆ(சு)இல் ஆன்மத்தில் தோன்றிற்(று) ஆகாயமும்' எனவே
ஏசல்இல் பெரும்அரணியம் தைத்திரீயமுமே.

புத்தி முதலிய குணங்கள் நித்தியம் அல்ல

49. இவ்உலகினுக்(கு) இறைவனும் நிமித்த காரணனேல், [வன்
ஒவ்வும், செய்கையோ(டு) அழி(வு) இவை, உவனுக்கும், குய
ஒவ்வவே; 'மதிஆதிய குணங்கள் ஒன்பானும்
கவ்வும் நித்தியம்' என்றிடின், கடவுளும் நிலைத்த

50. இச்சை உள்ளவன் ஆய்ச் சகப் படைப்பினின் இங்கு
நிச்சலும் தலைக்கொடுத்(து) ஒரு சிறிதும் ஓய்(வு)இன்றி
நச்சுறும்; சமுசாரமும் ஓய்(வு)இன்றா நடக்கும்;
மெச்சு வீட்(டு) உபதேசம் வீண்; நூல் பயன் இன்றே.

ஈசன் ஜகத்தினைப் படைப்பதும் பிறவும் மாயையாம்

51. ஆதலின் இறை ஜகத்தினைப் படைத்தல் என்பதுவும்
ஓது(ம்) மாயையின் பகட்(டு) அ(து)ஆம்; பந்தமும் வீடும்
தீதுதீர் உபதேசமும் ஆதிய பிறவின்
வாதுசேர் விவகாரமும் மாயையான் அமைவ.

இரண்டாம் உல்லாஸம் முற்றும்

---

48. பெரும் அரணியம் - பிருஹதாரண்ய உபநிஷத்து, தைத்திரியம் - தைத்திரீயோபநிஷத்து.

49. குணங்கள் ஒன்பானவன: உடற் குணங்களான தியம், வெறுப்பு, இன்பம், துன்பம், அறம், பாபம், விருப்பம், முயற்சி எனச் செய்யுள் 23-ல் கூறப்பெற்றவை. ஈண்டு ஒன்று குறைந்திருப்பதோடு ஆத்மாவின் குணமான இவேச்சையையும் சேர்த்து வைசேஷிகர் ஒன்பதாக்கிக் காட்டுவர்.

# மூன்றும் உல்லாஸம் - ஆத்மைகத்வம்

## ஜீவேசுவரர் ஒன்றே எனல்

3\. எவனதே ஆன விளக்கம் உண்மையினின்
இல்பொருள் சார்ந்(து) ஒளிர்வதுவோ,

---

### பிம்பாதி தர்ப்பண நியாய மறுப்பு

1\. 'உள்ளதன்மையும் ஒளிர்தலும் பொருளுக்(கு) எங்(கு)இருந்[து]
கொள்ளவந்தன?' என்று, கண்ணடியில் பிம்பம்
உள்ளநீதியின், வினவு(ம்) மாணவகனை நோக்கித்
தள்ளுருவகை அவன்உளம் தெளிதர உரைப்பார்.

### எல்லாம் ஆத்ம ஸ்வரூபமே

2\. இல்பொருள்எனச் சடம்எனக் கணத்தினில் அழிய
வல்ல தன்மையின் பொருள்களின் உண்மையும், ஒளி(ஓடு)
எல்உறுதலும், நித்தியத் தன்மைசார் ஈசன்
வல்லபத்(து) இருந்(து) அணைந்துவந்(து) அளாவுகின்றனவே.

3\. இப்பொருள்களின் இருப்பும்அவ் ஆத்தும இருப்பாம்;
செப்பிடின் அதற்(கு) அதிகமாச் சாற்றுதற்(கு) இலேயால்;
அப்படித்ததே அவற்றினிற்(கு) அறைகின்ற விளக்கம்,
தப்(பு)இல் ஆத்தும விளக்கத்தின்மேல(து) அன்(று) அறிக.

---

1, 2. ஸத்வமும், அறிவும் வஸ்துக்களில் இல்லை, காண்போனிடத்துள் ளன எனில், வஸ்துக்களினிடத்து அவை காணப்படுவானேன் என்ற வினு எழும். கண்ணடியிற்போல பிரதிபிம்பிக்கின்றனவென்ருவது, இரும்பிலுள்ள தீப்போல ஒட்டிக்கொண்டன என்ருவது சொல்லலாமோ எனின், ஸத்வமும், அறிவும் ரூபமற்றன வாதலின் அவ்விரண்டும் இயலா. அவை ஈசுவரனுகிய நித்திய வஸ்துவிலிருந்து வெளிப்பட்டு நிமிஷந்தோறும் அழிவதனுல் இல்லை என்றே சொல்லத்தக்க ஜடங்களில் சேர்கின்றன.

3\. தத்துவங்கள் ஆத்மாவினின்றும் தனியாகக், கண்ணடி தனிப்பட விருப்பதுபோல், இருக்கின்றனவா? அல்லது தத்துவங்களே இருப்பையும் ஒளியையும், ஆத்மாவை எதிர்பாராமல், தனியாகப் படைத்திருக்கின்றனவா? என்று இரண்டு வினு எதிர்ப்படும். விடை: தத்துவங்கள் ஜடமாகவும், கணப் பொழுதில் பழுதையிற் கண்ட பாம்பைப்போல அழிவனவாயும் உள. அதனுல் தத்துவங்களுக்குத் தனியிருப்பு இல்லை. ஆத்மாவே தத்துவங்களாகக் காணப் படுகிருன் என்க. தத்துவங்களுக்குத் தனிப்பட்ட இருப்பு இல்லாமையால்



எவன் அடுத்தவருக்(கு) 'அதுநீ ஆகின்ருய்'
எனும் மறை மொழியை நேர் உணர்த்தும்,

---

4\. பல்விதப்படும் அறிவுகள், அவற்றினுல் ஆகும்
பல்விதத்தஆம் விஷயங்கள், நூலினில் பரிந்து
செல்லு(ம்)நல் மணித்திரள் எனக்,குழுமி, ஆங்காரத்(து)
ஒல்லையில் புகுந்து ஒன்றுறும்; அன்றிவே(று) இலேயே.

5\. நீரினும் பிறி(து)ஆக வே(று)இருப்பு, நீர்க்குமிழிக்(கு)
ஓரின், நல்திரைக்(கு) உள்ளதோ? இலை; அதைநிகர்த்துத்,
தேரின், இச்சகம் யாவுமே ஒளியினின் வே(று)ஆய்த்,
தீரலாத(து)ஆய்த் தெரி(வு) உறுகின்ற(து) இங்(கு) எவர்க்கும்.

6\. அறிகிறேன்என எவ்அறி(வு) அகிலத்துள் புகுந்து
தறை வெளிப்பட நிற்கின்ற(து), அது பினர்அகத்தே
முறையின் உற்(று)உள ஆன்மத்தின் இடத்தினேமொய்ம்பின
அறியநின்ற(து) என்னுல் என அமர்ந்திடும் அன்றே.

7\. குட(ம்) முதலிய காரியம், மண்முதல் கூறும்
சடமுதலினில் முடி(வு)உறத் தங்குதல்போலத்,
தடஅகிலமும் ஒளியின்வே(று) இன்(று)எனச் சாற்றின்,
நடைஉறும் உல(கு) இறைவயின் முடி(வு)உறும், நாடின்.

---

கண்ணடியிற்போல பிரதிபலிக்கிருன் என்ருவது அவற்றிற் கலந்துளானென் ருவது கூறுதல் தகாது. இது முதல் வினுவுக்கு விடை.

4\. தத்துவங்களுக்குத் தனிப்பட்ட இருப்பும் ஒளியும் இல்லை. ஆத்மா அந்தக்கரணத்தைத் தானுகக்கொண்டு தத்துவங்களைப் பிரகாசிக்கச்செய்கிறது.

5\. தத்துவங்களால் ஆன ஜகத் மித்தை. ஆத்மாவைத் தவிர வேறு இரண் டாவது இல்லை என்றபடி.

6\. அறிகிறேன் என்றவிடத்தும் அறிய நின்றது என்றவிடத்தும் அறியப் படும் வஸ்து இருப்பது உண்மை. முதலில் அறியும் தொழிலேயே குறித்துப் பின்னர் அத்தொழில் ஆன்மாவினிடத்தே உள்ளதென உணர்த்திற்று.

7\. காரணத்தின் வேருகக் காரியமில்லை, மண்ணின்றிக் குடமில்லாதது போல. ஜகத் அதற்கு உபாதான காரணமான ஆத்மாவோடுள்ளதேயன்றி ஆத்மாவின் தனியாக இல்லை. அதனுல் ஆத்மா ஒன்றே ஸத்து; ஜகத் மாயை யாம். ஆருவது செய்யுளில் உலக அறிவு ஆத்ம அறிவே என்று விளக்கியவர். 7-வது செய்யுளில் ஆத்மாவின் இருப்பைத் தவிர வேறு இருப்பு இல்லை என்று வெளிப்படுத்தினர்.

எவனது ஸாக்ஷாத் காரத்தால் மீண்டும்
பவக்கடல் எய்துதல் உறுதோ

### அவித்தை மயக்க ஹேது

8. தன்னிடம் படிந்(து) உறையும்அக் களிம்பினால் ஆடி
மின்ஒளி தரா(து) அழுக்(கு) அடைந்(து)இருப்பதுநிகர்ப்பத்
தன்னைச் சூழ்தரும் அறிவின்மை சாரும் ஞானத்தால்
பின்னரும் இவண் பிராணிகள் பே(து) உறுகின்ற.

### உடல் ஜீவனை ஈசனின் வேறுக்குகிறது

9. குடத்தின் வான்(ஒடு), பெரியவான் எனவகைகூறும்
நடத்தை, எப்படிக் கடம்எனும் உபாதியின் நடப்போ,
தடஸ்தமான ஜீவாத்துமா சார் பரமான்மா
கடத்தினால் வரும் உபாதியால் காணுறும் பிரிவாம்.

### அது நீயாகிருய் என்று சுருதி ஐக்கியம் உரைக்கும்

10. 'அவன்இவன்' என உரைப்பதில் ஒருவனே அவனுய்
இவனும் ஆகும் அக்கோளின், 'தத்துவம் அஸி' எனவே
நுவலும் வாக்கியம் ஆதியில் தத் துவப், பதங்கள்
கவலை இன்றியே ஒன்றுதல் கண்உறுவதுவே.

11. உலகு தோன்றுதற்(கு) உள முதற்காரணம், 'தத்' என்(று)
இலகுசொல்லின(து) அரும்பொருள், எனஇவண் உரைப்பர்;
அலகுசெய் உடல்ஆதியால் அளவுகொள் ஜீவன்
விலகுறு வகை 'த்வம்' பதம் மேற்கொளும் தனக்கே.

---

8. ஆடி, கண்ணாடி. பிராணிகள் அஞ்ஞானத்தால் மூடப்பட்ட ஞானத்தினால் மயங்குகின்றன என்க. பண்டைக்காலக் கண்ணாடி உலோகத்தாலானவை என்றறிக.

9. கடஆகாசம், குடத்தின்வான். மஹாகாசம், பெரிய வான். கடத்தினால், உடலினால் என்க.

10. அவன் இவன் என்பது ஒரே மனிதனையே குறிப்பதுபோல அது நீ ஆகிருய் என்பதும் ஒருவஸ்துவையே குறிக்கிறது.

11. தத், (அது). ஈசுவரனைக் குறிப்பது. மாயையின் விக்ஷேபத்தால் வெளிப்பட்ட ஜகத் ரூபமாகவுள்ள இவ்வீசுவரனை ஜீவன் தன்னிற்பிறிதாக எண்ணுகிறது. த்வம் (நீ) என்றது ஜீவனைக் குறிப்பது. அவித்தை அல்லது ஆவரணசக்தியோடுகூடிய அக்ஞானத்தினாலுண்டான ஸ்தூல சூக்கும உடல்களோடு கூடி உபாதிப்பட்டு நிற்கும் பரமாத்துமாவே அது.



தவமுள அந்தத் திருக் குருமூர்த்தி
தக்ஷிணா மூர்த்திக்(கு)இந் நமமே.

### அவன் இவன் என்பதன் விளக்கம்

12. அவ்விடத்தின், அக்காலத்தின், அவ்அவஸ்தையினின்,
செவ்வையாகக் கண்உறப் பெற்றேன் 'அவன்' எனத்தேர்வர்;
இவ்விடத்தின், இக்காலத்தின்,இவ் அவஸ்தையினின்
அவ்வகைத்தினே காணுற நிற்கின்றேன் இவனே.

13. 'அவன் இவன்' எனும் தொடர்மொழி எப்படி இருசொல்
கவனம் ஆர்பொருள் விடுத்(து)ஒரு மனிதனைக் காட்டும்;
புவனம்ஆர் 'அதுநீ' எனும் புணர்ச்சியும் அற்றே
சுவையின் ஒன்றனைச் சொல்லுறும் உள்வெளி துறந்தே.

### ஸமானாதிகரண்யம்

14. சொல்இரண்டின் ஆம் சம்பந்தம் பொது வதிகரண்யம்;
சொல்லினின் பொருட்சம்பந்தம் விசேஷண விசேஷ்யம்
ஒல்லும்ஆ(று) என்பர்; இலக்கியம் இலக்கணை ஒன்றிப்
புல்ல நிற்பதால், வாக்கியம் ஐக்கியம் உணர்த்தும்.

### மகாவாக்கியம் மூன்ருவது இலக்கணையைச் சேர்ந்தது

15. 'கங்கையில் இடைச்சேரி'போல்,விட்டலக்கணையின்,
அங்கமாக வாக்கியப்பொருள் அறைவதற்(கு) உறுதாம்;
துங்கமார் 'வெள்ளைதாவுவது' என்னலின், விடாத
அங்க லக்கணை தன்னையும் அது கொளா(து) அன்றே.

---

13. ஒன்றனை என்றது ஜீவாத்மா பரமாத்மாக்களின் ஒருமையை. உள் வெளி துறந்தே என்றது பிரத்தியக்துவத்தையும் பராக்த்துவத்தையும் விட்டு என்றபடி.

14. ஸமானாதிகரண்யம் என்றது இருபெயரொட்டுப் பண்புபோல. சாதாரணப் பண்பாகக் கொண்டு விசேஷண விசேஷ்யமாகப் பொருள் தந்து நிற்பதும் ஆம். இலக்கணை = ஆகுபெயர். அது, விட்டலக்கணை, விடாத லக்கணை, விட்டுவிடாத லக்கணை என மூன்று வகைத்து. அடுத்த செய்யுளில் காண்க. வாக்கியம் என்றது மகாவாக்கியமாகிய 'தத்வமஸி' என்னும் வாக்கியத்தை.

15. வெள்ளை - வெள்ளை மாடு அல்லது குதிரை. கங்கை கரையை புணர்த்தி நீரை விட்டு நின்றது. வெள்ளை, குதிரை அல்லது மாட்டை யுணர்த்தித் தன் பொருளை விடாதுநின்றது.

16. மேவு 'நீஅது ஆகின்றாய்' ஆதிய தொடர்கள்
மே(வு) இலக்கணை, விட்டுமே விடாத லக்கணை ஆம்;
ஓ(வு)இல் 'அன்னவன் இவன்' எனும் வாக்கியாதியினை
மேவவே இவண் விளம்பப் பெற்றுள்ளது காண்க.

17. வேற்றுமைப்பட்ட விருத்திக்குக் காரணம் ஆன
கூற்றுக்கள் ஒரு பொருளினைக் குறிக்குமேல், இங்கு
சாற்றுவர் பொது அதிகரணத்துவம் எனவே
போற்று கேள்வி ஜீவேசுர பேதமே புகலா.

18. பரத்தின் அம்சம் என்றாயினும், விகாரம் என்றானும்
உரைக்குமாறு வாக்கியம் பொருள் கொள்ளுறாததுவே,
தரைத்தலத்துத் தன் மாயையால் சமைபடும் உருவில்
பொருத்தமாகவே ஜீவனைப் புகுந்(து) உறைதலினால்.

19. அவயவத்தினை இல்லது, விகாரம் இல்லது என்(று),
உவயம் ஆகிய அளவைஆம்'சுருதி யுக்திகளால்'
விவகரிப்பரால், கடத்து விண் பெரு வி(ண்)ணினுடைய
அவயவம் விகாரம் என ஆகுறாததுபோல்.

20. 'வச்சிரப்படை இந்திரன் நீ' எனும் அதுபோல்
உச்சிதப் புகழ்மேலதா வாக்கியம் உரைக்க
வைச்ச(து) அன்றுகாண்; 'நெருப்(பு)இம் மாணவன்'எனல்போல
நிச்சலும் உவமைப் பொருள்மேல் நிற்ப(து) அன்றே.

---

16. அன்னவன் என்றவிடத்து, விட்டு, இவன் என்றவிடத்து, விடாது, ஒரு மனிதனையே குறித்ததுபோல 'அது நீ ஆகின்றாய்' என்பதும் விட்டு விடாத இலக்கணையாம். மேவ, உவம உருபாக வந்தது.

17. 14-ல் சொன்ன ஸமானாதிகரண்யத்தைத் துல்லியப்படுத்திக் காட்டினார். வேதம் ஜீவனும் ஈசுவரனும் வேறு என்னாது. கேள்வி - வேதம். புகலா, எண் வழுவமைதி; வேதங்கள் எனப் பன்மைப்பெயராகக் கொள்ளினும் தகும்.

18. அம்சம் எனினும் அவயவம் எனினும் ஒக்கும். என்றானும் - என்றாயினும். ஈசுவரனே தனது மாயையால் சிருஷ்டிக்குள் நுழைந்த காரணத்தால் ஜீவனை ஈசுவரனது பாகம் என்றாவது மாறுதல் என்றாவது சொல்லுதல் தகாது.

19. கடாகாசமும் மஹாகாசமும்போல் ஜீவனும் ஈசுவரனும்.

20-23. மகாவாக்கியம் ஸ்துதிப்பொருளில் வந்ததல்ல; உவமைப் பொருளில் வந்ததும் அல்ல; காரணப்பொருளில் வந்ததும் அல்ல; ஜாதி வ்யக்தி கமகத்திலும் வந்ததல்ல: குணிகுணப்பொருளிலும் வந்ததல்ல; உபசாரப் பொருளிலும் வந்ததல்ல. சுருதி ஈசுவரனே ஜீவனாக உபாதிபேதத்தால் ஆனான் என்னும். துண்டம், மாட்டுக் கழுத்தில் தொங்கும் தாடி.



21. 'தோண்டிமண்' எனக் காரணகாரியம் தோன்றப்
பூண்டு நிற்ப(து) அன்று; அல(து)எனின் 'துண்டம்ஆ'ப்போல
வேண்டிச் சாதியை வெளிப்படத் தோற்றுவ(து) ஒன்றாய்,
ஈண்டு 'நெய்தல்கார்' எனக் குணிகுணம் உரைப்பதுவாய்,

22. சாற்றலும் சரியானதன்று; 'ஈசன்இப் பதுமை'
போற்றுவாம் எனக் கூறலின், உபாஸனைப் பொருட்டா
ஏற்று நிற்ப(து) அன்று; அரசன்றன் ஆளினை இறையாத்
தேற்றமாத் துணி வழக்குப்போல் முகமனாச் செப்பும்

23. அப்பொருளினும் வந்த(து) அன்(று); ஏன்எனின் அந்த
மெய்ப்பொருள(து)ஆம் ஈசனே ஜீவ ஆன்மாவாய்
ஒப்பி உள்புகுந்(து)உளன் என உரைத்திடும் சுருதி.
செப்புவோம் சிலர் அறிவின்றிப் பிதற்று சில் உரையே.

**ஆத்மா சரீரமென்பது அறியாமையால் வந்தது**

24. உடல்பொறி மனம்புத்தி நற்பிராணன் ஆங்காரம்
திடம்உறச் சமைந்(து) ஒத்தபோதுஆத்துமா அதனுள்
நடைபெறக் கலந்திட்டதால்; அவற்றுடைக் கலப்பே
அடம்உறக் கொள்வர் ஆத்துமத் தன்மையா, ஆதர்,

**ஆத்மா ஐங்கோசத்து வெளிப்படும் வகை**

25. விறகு லோஹத்தில் தீப்பற்ற விறகு லோஹங்கள்
அறியத் தீஎன நிற்பபோல் என்னவும் அறைவர்.
முறையின் ஆத்துமா அன்னப்பை ஆகும் இத்தூலத்(து)
அறிய நிற்பனால் பருமையன், சிறுமையன், அன்றி,

26. மெலிந்தவன், கருநிறத்தவன், வேற்றுமை காணும்
புளிந்தன் ஆதிய பிறப்பினன், மாணி, இல்லறத்தோன்,
வலிந்து கான் உறை வாழ்க்கையன், கல்உடை தரித்தோன்,
அலந்துபோன பல்விகற்பத்தின் ஆனவன், என்றே.

27. அன்ன கோசத்தை அறைந்தனம்; பிராண கோசத்துள்
துன்னி, 'வாழுவல்; பசிகொள்வல்; வேட்கை தோய்ந்து(உ)ற்றேன்'
என்ன நிற்கின்றான்; மனோமய கோசத்தின் ஐயம்
பின்உறத் துணி(வு) உற்றதா, நினைப்பதாப் பேசும்.

---

24. ஆதர் - அறிவிலிகள்.

25. ஜீவேசுவரர்களது பேதத்தை வார்த்திகக்காரர் பின்வரும் ஐந்து கோச பேதங்களால் சுருதி உரைப்பதைக் கூறுகிறார்.

28. பேசும் அந்த விஞ்ஞானத்தில் பெரி(து)உணர்ந்தவன் ஆம் ;
ஆ(சு)இல் ஆநந்தத்(து) ஆணவ வலிமையால் முன்செய்
கா(சு)இலா வினை, உபாஸனை கருதிஇன்(பு) அடையும்
ஈசன் தேகங்கள் இயைந்து பல் வகை எனத் தெரிவான்.

29. கோசப் போர்வையால் மூடுண்டு, கூறும்தன் அளவு
மூச, வெட்டுண்ட தன்மையின், முன்னுறத் தோன்றும் ;
தேசின் சூரியன் பலஎன நீர் தெரிவதுபோல்
ஈசன் தேகங்கள் இயைந்து பல்வகை எனத் தெரிவான்.

ஜீவனும் ஈசுவரனும் முக்கியத்தில் ஒன்றே

30. கருவி காரியம் இரண்டும் ஜீவேசுவரர் தம்மின்
மருவுகின்ற(து), ஓர் பொது இயல்பு ; அது, மதி மரத்தில்
சருவுகின்ற(து) என்(று) உரைப்பதாம் ; சந்திரற்(கு) ஒளியும்
இருவருக்கும் அச் சச்சிதாநந்தமும் உருவே.

31. ஏக லக்ஷணத்(து) இருவர்க்கும் ஐக்கியம் இயம்பும்
வாகைத்தன்மையே வாக்கியம் உணர்த்துறும் ; அதனால்
ஏக நல் ஒளி எது, அது, எவற்றினும் உறையும்
ஓகைசாரும் ஆன்மா எனல், ஒருதலைத் ததுவே.

32. தேவர் மானிடர் விலங்குஎனத் திரியும் அன்னவற்றிற்(கு)
ஓ(வு)இல் நல்ஒளி அன்றி ஓர்நிலை இலை பிறிதும் ;
ஜீவனும் ஒளிஎன்பதும் ஒன்றுபட்(டு) உளதால்
ஜீவனே எலாவற்றின் ஆன்மா எனத் தெரிந்தார்.

33. ‘இவ்வகை எலாம் ஒளிஎன அநுபவம் எய்திச்
செவ்விதின் பெற்ற அறிவின்கண் திடம்பெற்றோர் மீண்டும்

29. கோசம், அன்னமயகோசம் முதல் ஐந்து. மூச, மூட. வெட்டுண்ட தன்மை, பின்னப்பட்டுக் காணும் தன்மை. நீரில் பல சூரியன் எனத் தெரிவதுபோல் என்க.

30. இருவருக்கும் என்றது ஜீவ ஈசுவரர்களைக் குறித்து நின்றது. ஸத், சித், ஆநந்தம் - சச்சிதாநந்தம். உண்மை, அறிவு, இன்பம் என்பதும் அதுவே, பொது இயல்பு - தடஸ்த லக்ஷணம்.

31. வாக்கியம், ‘அது நீ ஆகிறாய்’ என்பது.

32. பிரகாசம் தவிர வேறொன்றும் தேவர்க்கும், மனிதர்க்கும், விலங்கிற்கும் நிலை இலை யாதலின் அப் பிரகாசத்தோடொன்றின ஜீவனே ஸர்வாத்மகனும்.



இவ்வுலகினில் திரும்புறுக் கைவல்ய இருப்பை
ஒவ்வி எய்துவார்’ என மறை உறுதியின் உரைக்கும்.

34. தன்முயற்சியே இன்றி ஓர் நல் மகன் விதியின்
நன்முயற்சியால் ‘ஸர்வம் ஆன்மா’ எனும் நலத்தில்
துன்னுறப் பெற்றான் என்னினும் தோய்ந்த பாவங்கள்
மின்னின் நீங்குறச் சிவபதத்(து) ஏத்(து)உற மேவும்.

35. அற்(று)எனின் ஸருவாத்தும பாவனை அதிகம்
முற்றப் பெற்றவனே, சமுசாரத்தில் முழுகி
உற்ற மாந்தரை நேரினில் கரைக்கணே உயர்த்தும்
குற்றம் அற்ற பேர் இறைவனைக் கொள்ளுதல், தகுமே.

மூன்றாவதுவது உல்லாஸம் முற்றும்.

---

34. தன் முயற்சியாலன்றி விதியினால் எதிர்ச்சையாக ‘ஸர்வம் ஆன்மா’ என அநுபூதியின் உணர்ந்தான் ஆனாலும் அவன் சிவபதத்து அடைவான் என்க.

35. ஸர்வாத்மபாவனையில் பரிபூரணப்பட்டவன் ஸம்ஸார மக்னர்களாயுள்ள ஜீவர்களைக் கரையேற்றத்தக்க பரமேசுவரன் எனக் கொள்ளுதலே முறை.

## 4-வது உல்லாஸம்

### ஆத்மாவே ஸத் சித் என்பது

4. பற்பல தொளைகள் உள்ளஓர் குடநாப்
பண்உறை ஒருபெரு விளக்கின்,

---

### குடமும் ஆடையும் தாமே உள்ளன விளங்குகின்றன என்னும் ஆசங்கைக்கு மறுப்பு

1. ' கடபடாதிஆம் பாவங்கள் கண்எதிர், தாமே [இங்(கு)
அடை(வு)உடன், உள, விளங்குவ ; இறைவனின் கலப்(பு)
உடையதால் அல ; யாவர்க்கும் அநுபவம் இதுவாம்
திடம்உற ' எனக் கூறுவோர்க்(கு) உத்தரம் செப்பும்.

### புறப்பொருள்களுக்கு இருப்பும் இல்லை, ஒளியும் இல்லை

2. ' நான்'எனத், தனைநினைப்பவன், ' அறிகிறேன்நான் ' என்(று)
ஊனம் நீங்குற உணர்வுருவிடின், எதற்(கு) எதுதான்
ஞானம் ஆருற விளங்குறும் ? நவிலும் இச்சகமும்
மோனம் ஆர்தரும் உறக்கத்திற்போல் முடி(வு)உறுமே.

3. முன்னும் பின்னரும் காணுதற்(கு) இலாத(து) ஓர்பொருளுக்
உன்னும் இற்றைய காலத்தும் இருப்(பு)இலை; உண்மை, [(கு)
முன்மை பின்மை என்(று) அறைதரு பேதங்கள் ஒழிந்த
தன்மை உற்(று)உள ஈசன்மாட்(டு) உள்ளதே ஆகும்.

---

1-3. கடம் படம் ஆதியவை கண்ணுக்குத் தெரிபவை. அவை ஈசுவரனது கலப்பு உள்ளதால் விளங்குபவை யல என்பர். அது தவறு. பார்ப்பவனது ஒளியில்லாவிடின் அப்பொருள் தூக்கத்திற்போலக் கண்ணுக்குப் படா. முன்னும் பின்னும் இல்லாத ஒரு பொருளுக்கு இப்பொழுதும் இருப்பு இல்லை என்றே கொள்ளவேண்டும். ஒரு பொருளின் இருப்பு அப்பொருளைக் காண்போனது ஒளி அல்லது அறிவின் இருப்பினாலேயே என அறிக. அவ்வறிவு இல்லையேல் பாறைக்குள் மூடிக்கிடக்கும் ஒளியைப்போல் அறியப்படாமலிருக்கும். அதனால் வஸ்துக்களின் இருப்பென ஒன்று இல்லை. ஆத்மசைதன்யத்தின் இருப்பே இருப்பு. அதனால் ஆத்ம ஒளியேதான் உண்மையானது, ஜகத் மித்தையானது என்க. பாவங்கள், சொற்பொருள்கள்.



முற்பட ஒளிர்ந்து கண்முதல் பொறியின்
முயங்குவ(து) எது வெளிப்பட்டே,

---

4. ஜடங்கள் ஈசனே இன்றி இங்(கு) ஒளிருதல் சமைந்தால்,
மடங்கள் நீங்குற யாவும் இங்(கு) எவற்றையும் காணும்,
அடம்பெற ஒன்றும் எவற்றிற்கும் அறி(வு)உரு மடமும்
இடம்பெறும் ; ஜகம் முற்றுணர்(வு) இன்(று) எனில், மடமை

5. எய்தி ஓர் படித்(து) ஆகவே இருக்குமால்'; ஜடமும்
உய்தி சாரும் சேதனம் தன(து) ஒளியினோ(டு) ஒத்தால்
ஐதின் காண்பதும் கண்ணுறப்படுவ(து) ஆதியவும்
வெய்தின் ஒக்குறும், பொறிகளில் முறைஇன்மை மேவும்.

6. கண்ணினால் சுவை காணலாம் ; சுவையுமோ மூக்கை
எண்ணிக் காணுறும்; நாற்றத்தைக் கா(து) அறிந்(து)இயையும்;
வண்மை ஆக ஓர் உருவத்தை மருவி நா உணரும் ;
திண்ணின் இன்னவை ஜகமதில் நடையுறல் இலையே.

### ஈசுவரன் உபாதிதுவாரா அறிகிறான், செய்கிறான்

7. தருப்பணத்தினில் தெளிவு(ஒடு) மலினம் சார்பக்கம்
இருக்கும் ஆறுபோல், கரணத்தின் இரு பக்கம்ஆன
திருக்கு திர்சிய ஞானமும் கிரியையும் சேர்ந்த
பெருக்கில் ஈசனே செய்பவன் அறிஞன்ஆய்ப் பிறங்கும்.

---

4-6. மடங்கள் - அறியாமைகள். ஜடங்கள் இயல்பாக அறிவு அல்லது ஒளி பெற்றிருப்பின், சில ஆபாசங்கள் நிகழ்வதை வார்த்திகக்காரர் கூறுகிறார். கண்ணினால் சுவை காணலாம் ஆதி விபரீதங்களைத் தமிழிற் செய்யுளில் விரித்துரைத்தார்.

7. தருப்பணம், கண்ணாடி. கரணம், அந்தக்கரணம். கண்ணாடியின் மலினபக்கம்போல அந்தக்கரணத்தின் இருண்ட பக்கத்தில் (பிராணனில்) ஈசன் நுழைந்து தொழிற்செய்கிறான். கண்ணாடியின் தெளிந்தபக்கம்போலுள்ள மனத்தில் (புத்தியில்) ஈசன் கலந்து பொருள்களை யறிகிறான். இதனையே முதல் உல்லாஸம் 22-வது செய்யுளில் ஸூசிப்பித்தார். செய்யுளில் முரண்தொடையாகக் குறித்துள்ளார். ஞானமும் கிரியையும் என்று முதலில் கூறி, மாறாகச், செய்பவன் அறிஞன் ஆய் என்று கூட்டியிருப்பது காண்க. ஞானபக்கத்தில் அறிஞனாகவும், கிரியா பக்கத்தில் செய்பவனாகவும் பிறங்கும் எனக் கூட்டிப் பொருள்கொள்ளுக.

தற்பரம்ஆக, ‘அறிகிறேன்’ என்னும்
எதனைச் சார்ந்(து) அகிலமும் தயங்கி

8. மலினம் அற்றது ஓர்ஆடியின், ஸத்துவ வளர்ச்சி
புலின புந்தியும், துலக்கம் உற்று ஆன்ம சாயையினால்
கலின வாம்பரிக் கதிகொடு விடயத்தின் காலை
வலிமை கொள்ளூறப் பற்றுறும். வட்டையின் ஆரின்

9. இயைவு பெற்(று) உள இந்தியம் ஆம் புறக் கரணம்
இயைவு பெற்றஅவ் அகக்கரணத்தினை இயைந்து
தயவின் அன்னதின் ஆணையை வகைபெறத் தாங்கி
ஐயம்உறத் தொழில் புரிபவாம், தமக்(கு) உணர்(வு) இலாதே.

10. வலையில் பின்னுண்ட நூல்களை மான, நாடிகளும்
நிலைபெற அகக்கரணத்தே பின்னுண்டு நிலவும் ;
புலிங்கம் என்ன அப்பொறிகளும் பொருள்களை நோக்கி
நலம்பெறச் செலும் கோளகாந்தத்(து) அவற்றாடே.

11. தேகத்தின் நடுத்தானமே மூலம்ஆம் ; குதத்தின் [(து)
ஊகித்(து) உற்(று) அறி இரண்(டு) அங்குலத்தின்மேல் உயரத்
ஆகத், தன் குறிக்(கு) அக்கணக்(கு) ஆழ்ந்துமே உறைவ(து)
ஏகக் கீழ்முனை கூர்த்த முக்கோணத்தின் இயையும்.

12. பிராணன் அக்கினி பிந்து நாதம் பிறப்பிக்கும்
திராணி உள்ளஅக் குண்டலினீ எனும்பெரிய
இராணிஆம் பராசத்தியும் நிலைத்(து) இருக்கின்றாள் ;
தராதலத்தினர் சரஸ்வதி என்பரால் அவளை.

8-10. ஆடி, கண்ணாடி; புல்லின, புலினஎன இடைக்குறைந்தது. ஸத்துவவுணர்ச்சி வேண்டினார், ராஜஸ தாமஸ உணர்ச்சிகள் ஆசையையும் மறதியையும் ஊட்டுதலின். மலினமற்ற ஆடிபோன்றது புத்தி என முற்பாட்டிற் குறித்தார். இந்திரியங்களுக்குச் சந்தேக விபரீத உணர்ச்சிகள் ஏற்படின் அவை அந்தக்கரணநிலையைப் பொறுத்தன என்பதை விளக்கினார். அந்தக்கரணம் என்பது ஞான சக்தியும் கிரியா சக்தியும் பொதிந்துள்ள லிங்க சரீரம் ஆம். புலிங்கம், தீப்பொறி. நாடிகள் கோளகங்களில் முடிவுற்று நிற்கும் விஷயத்தை 10-ம் பாட்டு நான்காம் அடியில் உணர்த்தினார்.

11. மூலாதாரம் குதத்துக்கு இரண்டு அங்குலத்துக்கு மேலும்,ஜனனேந்திரியத்துக்கு இரண்டங்குலத்துக்குக் கீழும் உள்ளது.

12. மூலாதாரத்துக்கு அதிதேவதை குண்டலினீஆம். அப் பராசக்தி, பிராணன் (வாயு அல்லது சந்திரன்) அக்கினி (சூரியன்) பிந்து (வெளிப்படாத



நிற்பன, அந்தத் திருக் குருமூர்த்தி
தக்ஷிணா மூர்த்திக்(கு)இந் நமமே.

13. மூலத்தின் முதல்முனை நின்று சுழுனை ரந்திரத்திற்(கு)
ஏலச் செல்வதாம் ; அடிக்கணே பிளந்தவேய் என்ன
நாலினோடு இரண்டுஅரிய ஆதாரம் உண்(டு)அதனில் ;
கோலமார் இடை பிங்கலை எழும் முனை குறித்தே.

14. நாடி மூன்றும் இவ்வகை நிற்றல் நாடி சக்கரம்ஆம்;
நாடி மற்றவை இதனின்றும் மேக்குஉற நடக்கும் ;
தேடி, யானைநா, காந்தாரி எனச்செப்பும் இரண்டும்
ஓடிக் கண்வரை யொழுகுவ ; மூக்குறும் இரண்டே.

15. பூடை(ஓடு) அலம்புடை இருநாடியும் கோழி
ஈடில் முட்டைபோல் விளங்கு கொப்பூழிருந்(து)ஓடி
நாடிக்கா(து) இரண்(டு) இயைந்துள ; சுக்கிலை அதனின்(று)
ஓடிப் பூருவின் நடுவினைக் கிட்டிநின்று உறையும்.

சப்தநிலை) நாதம் (காதைமூடக் கேட்கும் ஒளிபோன்றது. ஓங்காரம்) இவற்றைப் பிறப்பிக்கிறாள். பிராணன் (சந்திரன்), இடை (இளா) நாடியின் தேவதை. அக்கினி (சூரியன்), பிங்களா நாடியின் தேவதை. ஸரஸ்வதி, சூக்குமை வாக்குத் தேவி.

13. நாலினோடு இரண்டு ஆதாரம் = ஆறாதாரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. மூலாதாரம். | 4 | இதழ்த்தாமரை | மூலாதாரத்தில் | இருப்பு |
| 2. ஸ்வாதிஷ்டானம். | 6 | ,, | ஜனனேந்திரியத்தில் | ,, |
| 3. மணிபூரகம். | 10 | ,, | கொப்பூழில் | ,, |
| 4. அநாஹதம். | 12 | ,, | இதயத்தில் | ,, |
| 5. விசுத்தி. | 16 | ,, | கண்டத்தில் | ,, |
| 6. ஆக்ஞை. | 2 | ,, | புருவநடு | ,, |

சுழுனை - ஸுஷும்நா நாடி. ரந்திரம் பிரஹ்மரந்திரம். இடை பிங்கலை என்னும் நாடிகள் மூலத்தில் இருபக்கங்களினின்றும் கத்திரிபோல வீணாதண்டைச் சுற்றிச் செல்வன. வீணா தண்டு, முதுகெலும்புச்சரம்.

14-15. யானைநா - ஹஸ்திஜிஹ்வா. மூக்குக்குச் செல்வன இடை பிங்கலை இரண்டும். பூஷா, அலம்புஷா காதுவரை. சுக்லா புருவ நடுவரை செல்கிறது. கோழிமுட்டையைப்போலிருக்கும் கொப்பூழ் என்க. சுக்கிலையும் கொப்பூழிலிருந்தே கிளம்புகிறது.

16. நாக்கின் கோடியில் நடப்பது ஸரஸ்வதீ என்பர் ;
வாக்கை அன்னது கிளப்புறும் ; விச்சுவோதரியும்
சேர்க்கையான நால்வகை யுண்டி கொளும் ; பயச்சுவினி
வேட்கை தீர நீர் கொண்டு தும்மலைக் கண்டம் விளைக்கும்.

17. நாடிச் சக்கர நின்று கீழ்நடப்ப, சுக்கிலத்தைத்
தேடி விட்டிடும் ராகையும் மலம்விடு குகூவும்,
ஓடும் மூத்திரம் ஒழுக்கிடும் சினீவாலி உதுவும்
நாடிக் காணுக ; சங்கினி உணவின் ஸாரத்தை.

18. ஏற்(று)இரந்திர உச்சியை இயைந்து மூர்த்தனியில்
ஆற்றவும் பெருக்(கு) எடுத்(து) உறஅமுதத்தைத்தெளிக்கும் ;
நூற்(று)ஒன்(று) உள்ளனநாடிகள் ; அவற்றினுள் ஒன்று
கூற்(று) ஒழித்திட உச்சியில் சென்(று) இருப்பதுவே.

**விழிப்பு, கனவு, உறக்க நிலைகள்**

19. புந்தியிற் சென்ற புண்ணியம் தூண்ட ஐம்பொறியின்
நந்து மார்க்கத்திற் சென்(று) ஒலி ஆதிய புசிக்கும்
அந்தில், காலமே நன(வு) அ(து)ஆம் ; பொறியெலாம் ஒடுங்க
முந்து வாஸனை மனத்தினால் துய்ப்பது கனவே.

---

16-17 விசுவோதரி வயிற்றிலிருந்து உண்ணும். பயஸ்வினி கண்டத்திலிருந்து தும்மலை விளைக்கும். ராகா, ஸினீவாலி, குஹூ இவற்றின் தொழிலைக் கூறினார்.

18. சங்கினி பிரஹ்மரந்திரத்தூடே சென்று ஸஹஸ்ராரத்தில் அமிர்தத்தைப் பெருக்கும். நூற்றொரு நாடியில் ஒன்று கபாலத்துள் சென்று மோக்ஷத்தைத் தரும். அமிர்தம் விளைப்பது லம்பிகா யோகத்தினால் கிடைப்பது என்பதை 9-வது உல்லாஸச் செய்யுளில் பார்க்க. "நூற்றொரு நாடிகள் உள. அவற்றுள் ஒன்று கபாலத்துட் செல்வது. அது வழியாகச் சென்று ஒருவன் முக்தியடைகிறான்" என்பது வேதாந்த சாஸனம் ஆம். இது கடோபநிஷத்திலிருந்து (6 - 16) எடுத்தாளப்பட்டது.

19. ஒலி ஆதிய, சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தம். ஜீவன் புத்தியைத் தானாக மதித்து இந்திரிய த்வாரா விஷயங்களை அநுபவிக்கிறான். புத்தி புண்ய கர்மத்தினாலும் (பாப கர்மத்தாலும்) நிறைந்துள்ளது. வார்த்திகக்காரர் புண்ய கர்மமென்றே கூறியுள்ளார். புண்யமும் பாபமும், ஸத் கர்மமும் அஸத் கர்மமும் தாரதம்மியப்படுத்துவோரது கருத்தைப்பற்றி நிற்பதுபற்றிப் புண்ணியந் தூண்ட என்றே கூறினார். நாடிகள் புறக்கருவிகளின் சம்பந்தத்தை ஒழித்து அந்தக்கரணத்தில் ஒடுங்குவது ஸ்வப்நாவஸ்தையாம். அப்பொழுது விஷயம் நினைப்பு மாத்திரையா யிருக்கும்.

20. மனம் ஒடுங்குதல் உறக்கம்ஆம் ; ஆதலால், மாயை
தினமும் தன்நிலை தன்னையே மறைக்க, 'உள்ளவன்யான்'
எனும்அவ் உண்மையே புமான்உணர்ந்திருக்கும் ; மாயையினால்
மனம் திரிந்துளோன் மத்தன்(ஓடு)ஆதன்ஆய் விளங்கும்.

**ஈசுவரன் ஒருவனே ஸத் சித்தாம்**

21. 'சுகத்(து) உறங்கினேன்' என்(று)இவ்வா(று) உரைத்திடும்ஆன்
இகத்து ஸத்துசித்(து) ஆநந்தவடிவம் ஆய் விழிப்பின் [மா
மிகத்தெளிவுடன் ஒளிர்கிறான் ; இவ்வகை மகேசன்
ஜகத்தினுள் புக்கு விளங்க எல்ஆதிய விளங்கும் ;

22. கடத்தின் தன்மையைக் கழறவும் வேண்டுமோ ? இறையை
அடுத்(து)எலாப் பொருள்உண்மையும் ஆயிற்று ; பிரமம்
தொடுத்த ஸத்தியம் வாய்ந்(து) அறி(வு) உள்ளது ; சுருதி
எடுத்(து)உரைக்குமால்அநந்தம்ஆய் அள(வு)அற்ற(து)என்றே.

---

20. மனமும் இறந்த இடம் ஸுஷுப்தி. அப்பொழுது மனம் அவித்தையில் ஒடுங்கி விடுகிறது. *இம்மூன்று அவஸ்தைகளும் ஸ்வயம்பிரகாச ஆத்மாவுக்கு மாயையாலேயே நேருகின்றன. மாயையின் சம்பந்தத்தாலேயே ஆத்மா, மூடன், ஜடன், அக்ஞன் எனத் தோன்றுவது.

21. எல் = சூரியன். 22. மகேசன் புகுந்தே சூரியன் முதலிய ஒளிகள் விளங்குமாயின் குடம் அவனன்றி விளங்காது என்பது சொல்லவும் வேண்டுமா ? என்றபடி. எல்லாப் பொருளுக்கும் இருப்பும், ஒளியும் பிரஹ்மத்தின் ஸத்திலிருந்தும் ஞானத்திலிருந்துமே வந்தன. 'ஸத்யம், ஞானம், அநந்தம் பிரஹ்ம' என்று சுருதி கூறும். பிரஹ்மத்தின் உபாதி வருமாறு.

| அணுத்வம் : வியஷ்டி அதியாத்மம் | | விபுத்வம் : ஸமஷ்டி அதிதெய்வதம் | | அவஸ்தை |
|---|---|---|---|---|
| உபாதி | அவஸரம் | உபாதி | அவஸரம் | |
| காரண சரீரம் | பிராக்ஞன் | அவ்யக்தம் | ஈசுவரன் | ஸுஷுப்தி |
| லிங்க சரீரம் | தைஜஸன் | ஹிரண்ய கர்ப்பன் | ஸூத்ராத்மா | ஸ்வப்நம் |
| ஸ்தூல சரீரம் | விசுவன் | விராட் | வைசுவாநரன் | ஜாக்கிரம் |

*துரியத்தில்தான் மனம் அற்றநிலை என்பர் தாயுமானார். 'சாக்கிரமாம்' என்ற பாட்டையும் அதற்கடுத்ததையும் பார்க்க. அது 5 அவஸ்தைகளை விளக்கவந்த பிரமேயமாம்.

23. நனவிலும் கனுதன்னிலும் விளைவன நவிலின் [டன்
இனையஎன்(று) எடுத்(து) உரைக்கொணுப்பொய்மைஆம், குரு
அனையதுளர் சடம் ஆகுமால், நான்என எல்லாக்
கனைகடற்புவி உயிரிலும் காண்பவன் இறையே.

ஈசனே ஆன்மா

24. அந்த நான் நிருவிகற்பமும் சுத்தமும் அழுக்(கு)என்(று)
அந்தில் மூவகைப்படும்; நிருவிகற்பம் ஆவதுவே
பந்த கற்பனை நீங்கிய பிரமம்ஆம், தூசி,
முந்(து)இருள், புகை, முகிலினின் நீங்கிய வான்போல்.

25. சுத்தநான் என்ப(து) எதுஎனில், தோய்ந்திடும் விவேகத்(து)
ஒத்த தேகம் ஆதிய வினை ஒட்டி நிற்பதனுல்
தத்து தோற்றத்தில் குறைந்த மீன்விண் எனச் சார்ந்து
சற்றுத் தன்இயல்பு உண்மையைத் தயக்கி நிற்பதுவே.

26. இருட்டு மூடிய வான், இடம்இல்லை போல் தோற்றும்;
குருட்டுநான் எனும்(ம்) மலினமும், அங்ஙனே, கொடிய
திருட்டு வெம்பொறி, தேகம், இன்னவற்றி னுள்சேர்ந்து
மருட்டும்; தன்இயல் ஈசனு வாய்ந்(து) அறியாதே.

27. ஜீவன் எப்பொழு(து) 'இறைநிலைநான்' எனத் தெளிந்தே
மேவும், அப்பொழு(து) எவற்றையும் அறிந்து செய்பவனுய்
ஆவன்; மாயையால் மயங்கியே அலையுறும் ஈசன்
ஓ(வு)இல் வித்தையால் ஒளிருவான். நிருவிகற்பத்தை

28. அடிக்கடி மனம் நினைப்புற, ஆத்துமா நன்ருய்த்
துடிப்பொடும் ஒளிதோய்ந்துறும்; அவித்தைஆம் திரையை
வெடிப்பின் ஓட்டவே, தக்ஷிணாமூர்த்தியா மேவும்
கடிப் பரேசனும் தன் ஒளியோடு கண் உறுவான்.

நான்காம் உல்லாஸம் முற்றும்

---

24. அழுக்குநான், குருட்டுநான், மலினஅஹம் மூன்றும் ஒன்றே. அந்தில், அசைச்சொல். 28 - கடி - காவல் மிகுந்த.



## ஐந்தாவது உல்லாஸம்

### ஆத்மாவைப்பற்றிய தப்பபிப்பிராயங்கள்

5. தேகமே, பிராணன், இந்தியம், சலித்துச்
சிதை(வு) உறும் புத்தி, சூனியமே,

---

உடலே ஆன்மா

1. "காட்சி ஒன்(று)அதே அளவைஆம்; கருது பூதங்கள்
ஆட்சி ஆகும் நால்தத்துவம்; மரணத்தின் வே(று)ஆய்
மோட்சம் இல்லையால்; இன்பமும் பொருளுமே மாந்தர்
நீட்சி பெற்(று) அநுபவத்திடும் பே(று)என உணர்க.

2. "'உலகுக்(கு) ஈசன்ஓர் கருத்தன்' என்பதில் உண்மைஇல்லை;
உலகத்தார் சொலும் மறுமையும் வீண்கதை; உடலின்
விலகி ஆத்துமா உள்ளதேல் குடம்என விசதத்(து)
இலக; தேகமே நெடில் குறில் கிழம் குழகு எதிரும்.

3. "இருத்தல் தோன்றுதல் மாறுதல் வளருதல் தோய்தல்
மரித்தல் என்(று) இவை ஆறும் இவ்உடலுக்கே மருவும்;
பெருத்த ஜாதியும் நிலைகளும் உடல்கட்கே பிறங்கும்;
பிறத்தலின் பினர் பேரிடல் ஆதிய உடற்கே.

4. "'வாழ்க நூறுயாண்(டு)' என்(று) உடல் வளரவே ஆசி
சூழ்களிப்பினே(டு) ஓதுவர் ஆஸ்திகர் உடலுக்(கு),
ஆழ்க மற்றுள கற்பனை" என்று தன் அறிவின்
தாழ்வினுல் இவை போதிப்பான் சாருவாகனுமே.

பிராணனே ஆன்மா

5. உயிர்க்கிறேன், உயிரோடு நான் வாழ்கிறேன், பசியின்
வெயர்க்கிறேன், அறல் வேட்கையின் நலிகிறேன், ஆதி
இயற்கை ஆன எண்ணங்களின் வலிமையால் சிலரும்
செயற்கை ஆகிய பிராணன் ஆன்மா எனத் தெரிப்பர்.

---

1. காட்சி = பிரத்தியக்ஷப் பிரமாணம். நால் தத்துவம், காணப்படாத ஆகாசம் ஒழிந்த நான்கு பூதங்கள்.

2. கருத்தன் = கர்த்தா. விசதத்து = தெளிவாக. இலக = தெரியட்டும். குழகு = இளமை; குழகு இவற்றை எதிரும் என்க.

ஏகம்ஆய் நான் என்(று) உணருவார் மாதர்
இளையவர் குருடர் பேயரும் ஆம் ;

---

### இந்திரியங்களும் புத்தியும் ஆன்மா எனல்

6. கேட்கிறேன், எதிர் காண்கிறேன், முகர்கிறேன், கிளத்தின்
வேட்கை தீரவே உண்கிறேன் எனச் சொலி ஆன்மாப்
பூட்கை யாது எனின் பொறிகளே, திண்ணம்ஈது என்பர்.
மீட்டும் ஓர்சிலர்,அறிவதால், விளம்புவர் மதியை.

### உடல் ஆதிய ஆன்மா அன்று எனல்

7. மாயையின் மயக்(கு) எய்திய மாந்தர்தம் மனத்தின்
ஏயும் இத் துகள் ஒழித்திட இன்னவர் குற்றம்
ஆய வந்தவர் அறைகிறார் ; கல்லைப்போல் ஜடத்துள்
தோயும் ஈசன் ; அஃதில்லையேல் நான் எனச் சொலுமோ ?

### சரீரம் ஆத்துமா வல்ல. ஏன் ?

8. காண நிற்பதால், ஜடத்தன்மை யுடைமையின், கருதப்
பூணும் ஓர்நிறம் உருவமும் பூண்பதால், உறுப்பை
ஏண்உறப் படைத்திருப்பதின், பூதங்கள் இயைந்தே
தோணுகின்றதால், கடஉடல் ஆத்துமா அன்றே.

9. " மயக்கம் நித்திரை மரணம் என்(று) உரைக்கும் மூன்றினிலும்
தயக்கம் இன்றி நாம்உடலினைக் காண்கின்றோம் ; தானே
வியக்கும் மெய்யினின் வேறதா விளங்குறுவதனால்
இயக்கம் உள்ள ' நான் ' என்னும் ஆன்மாவினைக் காணோம்.

10. " உல(கு) இயங்குதற்(கு) ஒருதனிக் காரணம் என்றாழ் ;
அலகின் அவ்வகைக் காரணம் உடல் இயங்குவதற்(கு)
இலகும் ஆன்மமே ஆகுமால் ; 'ஈதுஎனது உடல்' என்(று)
உலகில் பாலரும் மாதரும் குருடரும் உரைப்பார்.

---

7. கல்லை ஜட மென்றார் உணர்ச்சியின்மையின்.

8. காண நிற்பது, தானே காணமுடியாதது. ஜடத்தன்மை உடைமையாவது சுயம்பிரகாசத்துவ மில்லாமை. தோன்றுகின்றதால் என்பது எதுகை நோக்கித் தோணுகின்றதால் என மருவிநின்றது.

சே(கு)உற மாயா சக்தியின் தளுக்கால்
சேர்ந்தஇப் பெருமயல் துடைக்கும்

---

11. " இன்ன(து) அன்றிஇங்(கு) ' யான்உடல் ' என இயம்புறுவோர்
பன்னுதற்கு இலர் ; அவ்வகை உணர்ச்சியும் பழகா

### இந்திரியங்கள் ஆன்மா அல்ல

" உன்னின் இந்தியங்களும் உணர்கருவி ஆதலினால்
மன்னு தீபத்தின், அன்ன ஆன்மாக்களும் அலவே.

12. " வீணை என்ன, ஓசையை உணர்கருவி சோத்திரம் ஆம் ;
காணும் மூன்(று)ஒளி என்னக், கண், நிற உரு ஒரும் ;
யாணர் பூக்குடலையின், கந்தம்அறிவது நாசி ;
மாணும் தேன்தயிர் நெய்யின், நாச் சுவையுணர் கருவி.

13. " யான் படைத்திலேன் பொறிகளை ; மூங்கை, யான், குருடன் ;
யான் செவித்திமிர் எய்தினேன் ' என உறுப்பறைகள்
ஆன்ற பூரண அறிவினின் அறைகிறார் ; அவர்கள்
ஏன்ற ஆத்துமா இன்றியா இத்தகை உரைப்பார் ?

### பிராணன் ஆத்துமா அல்ல

14. " தூக்கம் கொள்பொழு(து) அறிவொடு துதை(வு) உறாததனால்,
ஊக்கம் தந்திடு பிராணனும் ஆத்துமா அலதாம் ;
ஆக்கையின் களைப்(பு) அகற்றிட அவன்துயில் உறவே
பாக்கி உள்ள போகங்களைத் துய்த்தல் பாராட்டி,

---

11. சாருவாகன் அனுமானம் பிரமாணம் அல்ல என்பது சரியல்ல. பசியெடுத்தபோது சாப்பிடப்போகும் உணவு அப்பசியை மாற்றும் என்பது அநுமானமே யன்றி வேறு என்ன ? ' நான் மனிதன் ' என்பதும் தீர்மானப்பட்ட முடிவு ஆகாது. ஏனெனில் ஒருவன் கனவில் தானே புலியாக மாறினதாகக் காண்கிறான்.

11. தீபம் பொருள்களை அறிவதற்குக் கருவியாவதுபோல இந்திரியங்களும் விஷயங்களை உணரக் கருவிகளாம்.

12. மேற்கண்ட நியாயத்தைத் தொடர்ந்து தனிப்பொறிகளை உதாரணப்படுத்தி காட்டினார். யாணர், புதுமையை உணர்த்திற்று. சோத்திரம் ஸ்ரோத்திரம் என்பதன் தற்பவம்.

தாகம்ஆர் அந்தத் திருக் குருமூர்த்தி
தக்ஷிணா மூர்த்திக்(கு)இங் நமமே.

---

15. “ ஆக்கையைப் பரிந்(து) ஓம்புவான் பிராணனும் அலையும் ;
வீக்கம்ஆர் அதுசேதனம் தோய்ந்ததேல் விழைவின்
தூக்கம்ஆர் பொறிஓய்வுழித், தொழில் செயப்புகாமல்
நீக்கம் எய்திஇங்(கு) இருத்தல் வேண்டும் ; அது நிலாதே.

16. “ தொழிற்செய் காலையில் இந்தியம் ஓய்வினில் தோய்தல்
மொழிகொளப் படா(து) ; அரசன் போர்முனைவுறின் சேனை
பழிப்பின்உற்(று) ஒன்றும் உஞற்றிடா(து) இருப்பதோ பகரின்
எழிற்பிராணனும், ஆதலின், பொறிக்(கு) அரசு அன்றே.

17. “ மனத்தை ஆட்டும்நல் புருஷனும் ஓய்வுழி, மனத்தோ(டு)
இனத்தின் ஆடும் இந்திரியங்கள் ஓய்வுறும் ; இதனால்
கனத்தநல் கரணங்களுக்(கு) அதிபதி, கழறின்,
உனத்தகா ஒருபுருஷன்ஆம் ; உயிரினும் புறம்பே .”

### புத்தி ஆத்மா அல்ல

18. புந்தியோ எனின் கணத்(து) உறும் ; போக்கொடு வரவும்
அந்துறும் ; அது ஆன்மத்தின் எதிர்ஒளி ஆக
நந்துவிக்கும் இவ் உலகினை ; ஆன்மத்தில் பிறந்தே
நந்தும் ; முன் பினர் இல்லது சுயம்பு ஆகாதே.

19. கணம்தொறும் பிறந்(து) அழிவுறு ஞானத்தின் தொடர்ச்சி
எணின், அதனையே ஆத்துமா என்னலாம் என்னின்,
கணமுதற்கணே நின்றதின் பின்அறிவு உதிப்பின்
‘ கணமதே உள(து) ஓர்அறிவு ’ எனல் கடியுறுமே.

20. அங்ஙன் அன்று முற் கணத்தினில் தோன்றிய ஞானம்
இங்ஙன் பிற்கணத்(து) இல்லையால் ; ஓவ்வொரு ஞானம்

---

15-16. அரசன் வேலைசெய்ய வேலைக்காரர் சோம்பியிரார் ; பிராணன் அரசனாயின் இந்திரியங்கள் அயர்ந்து கிடக்க அது (பிராணன்) வேலைசெய்தல் கூடாது. அதனால் பிராணன் ஆத்மா அல்ல.

17. உயிர், பிராணன். கனத்த நல் கரணங்கள் என்றது, அந்தக்கரண இந்திரிய ஸமூகங்களத்தனைக்கும் என்றபடி.

18. நந்துவிக்கும், ஒளிர்விக்கும். நந்தும், கெடும். முன்னும் பின்னும் இல்லாத புத்தி ஸ்வயமாக இருப்புள்ளதல்ல.



எங்ஙன் வந்த(து) ஆம் ? இன்மையில் தோன்றிய(து)என்னின்
அங்ஙனம் ஒன்றும் இன்மையின் ஆதல் கூடாதாம்.

### உடல் முதல் புந்தி யீறாகவுள்ளதன் கூட்டமும் ஆத்மா அல்ல

21. உடல்பொறி உயிர்புந்தி என்(று) ஓதிய ஒவ்வொன்(று)
அடல்பெறச் சொலற்(கு) ஆத்துமா அன்(று) எனின், அவற்றின்
திடம்பெறும் சமுதாயமே ஆத்மா என்றற்(கு)
உடம்படுதல் ஏன் ? ஒப்பிடீர் என்பதை மறுப்பார்.

22. அறிவு கூட்டத்தின் உளது எனின், அவற்றினின் ஒன்றைப்
பிரி(வு) உறுக்க ஸங்காதமும் அற்றதாம் ; பேசும்
அறிவும் இன்மையாய்ப் போய்விடும் ; ஓவ் ஒன்றற்(கு) அறிவு
நெறிகளுண்(டு) எனின், நெறிபல திறத்துச் செல்விருப்பம்

23. அவற்றினிற்(கு) எலாம் அடைந்திடின் ஸமஞ்சஸம் இன்றாம் ;
தவற்றின் ஒன்(று) ஒருநெறி செல, மற்றது தடுத்தே
கவற்றின் எய்துறும் நிறுத்துமால் ; கருதிடின், முட்டோ,
எவற்றினும் பல முறிவதோ, இவற்றின் ஒன்(று) எய்தும்.

### ஆத்மா ஸர்வாந்தர்யாமி

24. தேகத்(து) உள்ளுளே உள்ளதே ஆயினும் ஆன்மா
மாகத்(து) உள்ள வான் என, மகிதலம்தொறும் வளர்ந்தே
ஏகத்(து) ஓங்கி நின்றிடுவதாம் ; அணு அளவு எனினோ
தேகத்(து) எங்கணும் பரவுதல் செப்பல் ஆகாதே.

25. உள்ளஓர் இடத்(து) அன்றி மற்(று) உறுப்(பு) உளஎல்லாம்
தள்ளரும் உணர்(வு) உறுதல் சாலாது ; வெம்மணலில் [தாய்
கொள்ளும் வெப்பமும் தலைக்(கு) உறாது ; உறுப்புக்கள்கொத்
கொள்ள நிற்கலா, பஃறொழில் ஒருகணம் விளைத்தே.

26. அணுஅள(வு) அல(து) ; உடம்(பு) அளவிற்(று) எனின், குழவி
எணும் வயோதிகம் ஆதிய இயைகுதல் கூடா ; [க்(கு)
அணவும் நல்உடல் போல்திரி(பு) உள்ளதா அறையின்,
கணத்(து) அழிவுறும் நினைவுகூர் மாறுதல் கழிந்தே.

---

21. தனித்தனியாக ஆத்மா இல்லை என்றால் அவற்றின் கூட்டம் ஆத்மா என்று ஏன் ஒப்புக்கொள்ள வேண்டும் ? அப்படி ஒப்புக்கொள்ளுங்கள் என்பவரது கொள்கையை மறுத்துக் கூறுகிறார் என்க.

22. ஸங்காதம், தொடர்பு.

23. ஸமஞ்சஸம், பொருத்தம். முட்டு, தடை.

25. பஃறொழில் ஏககாலத்து உறுப்புக்கள் செய்தல் முடியாது என்க.

27. மாறுறும் வினைக்(கு) ஏற்ப மற்(று) உடலங்கள் எடுப்பின்
ஏறுறும் அவற்(று) உடலினில்; எறும்பி கீடாதி
வேறுவே(று) உடல்எய்தினும் வியாபகம் ஆகித்
தேறும் அவ்வுடல்அளவினில், கடாதி வான் தெரிப்ப.

28. மிக்க நுண்ணி(து) ஆம் மனத்தினும் விளங்குறும் ஆன்மா;
ஒக்க அன்னதில் சராசர உலகமும் கனவில்
புக்கு நின்றிடும் ஆதலின், ஆன்ம வ்யாபகத்தைத்
தக்க ஆ(று) அறிந்(து) ஓதினர் தகைமைசால் அறிஞர்.

### மாயை

29. தேகம் நான்எனல் மயக்கம்ஆம்; காரணம் தெரிக்கின்
மோகம் ஆகிய பந்த காரணத்தினால் முளைக்கும்;
ஏகமாய் 'அகம்புகுந்(து) அரசு ஆள்கிறான்' எனவே
ஓகை சான்ற வீட்டின் பொருட்(டு) ஆரணம் உரைக்கும்.

30. இத்தகை இந்தப் பெருமயக்(கு), எழில்பெறும் வாத
உத்தமர் தம(து) எண்ணையும் மயக்கிடும்; ஓங்கும்
நித்தன(து) உருக் கண்டபின் நிமிஷத்தில் விலகும்.
முத்தகைப்படும் உடல்பொறி உயிர்என மொழியும்

31. தன்மையும் விடுத்(து) அளவைகள் தன்னமும் அறியா
மென்மையும் படைத்(து), அறி(வு) இன்பம் ஆகவே விளங்கும்
தன்மயப் பிரகாசம் ஆம் தக்ஷிணாமூர்த்திக்(கு)
என்மனத் தொடும்எழும் நமம் இயைவ(து) ஆகுகவே.

ஐந்தாம் உல்லாஸம் முற்றும்

---

27. எறும்பி, யானை. கீடம் ஆதி - கீடாதி, புழு முதலியவை. கடம் முதலியவற்றிலுள்ள ஆகாசத்தைப்போல என்க.

28. அன்னதில், அவ்வான்மாவில்.

29. ஆரணம் ஈண்டு தைத்திரீய ஆரண்யகம் 3-11-ஐக் குறித்தது.

30. இம்மயக்கம் ஸதாசிவனை ஸாட்சாத்காரமாகக்கண்டபின் இல்லையாம்.

31. மானதூர ஸ்வருபிணே என்பதற்கு அளவைகளால் அறியமுடியாத மென்மையைப் படைத்து அல்லது இந்திரியங்களால் அறியமுடியாத மென்மையைப் பெற்று என்று பொருள்கொள்ளலாம்.



# ஆருவது உல்லாஸம்

## ஆத்மா நித்திய ஸத்து

6. இராகு பீடித்த எல்மதி என,யார்
எழில்பெறு(ம்) மாயையால் மறைப்(பு) உண்(டு)

---

### சூன்யவாதமும் க்ஷணிக விஞ்ஞான வாதமும்

1. சொப்பனத்தினில் உல(கு) எலாம் அதினிடம் தோய்ந்தே
எப்படிப் பதிந்(து) உள்ளதோ, நனவிலும்கூட
அப்படிப் பதிந்(து) உள்ள(து)ஆம் எனின் உறங்குங்கால்
துப்பொடும் எவர் எவற்றினை அறிகின்றார் சொல்லாய்.

2. அதன்இடத்திலே நிலைத்த சேதனப் பொருள் எதுஆம்?
எதுவும் இல்லையால், ஆத்துமா இன்(று) எனல் பொருந்தும்
வதியும் எப்பொருளும் கணத்(து)அழி(வு) உறும்; சூன்யம்
எதுவும் ஆகும்; தற்கிழமைய பொருள்எலாம் ஈண்டே.

### சமுதாய வாதம்

3. நீர்நிலம் நெருப்(பு) அகவுறும் வாயுமற்(று) இவைதாம்
ஏர்பெறும் பரமாணுக்கள் இயை சமுதாயம்;
தார்சொலும் மநுஆதிய உடம்புகள் சாற்றின்
சேர்வதாம் உருஆதிஐம் கந்தங்கள் இயைந்தே.

### ஸ்கந்தம்

4. கந்தம் ஐந்(து)எனக் கழறுவர் உருவம் விஞ்ஞானம்
ஐந்து ஸம்க்ஞையும் வாசனை வேதனைஎன; இவ்
ஐந்தும்கூடி இங்(கு)அகச் சமுதாயமும் தோன்றிப்
பந்த வாழ்வைஎல்லாம் பரிந்து உலகினில் நடத்தும்.

---

சூன்யவாதமும் க்ஷணிக விஞ்ஞானவாதமும் மாத்யமிக யோகாசார புத்த வாதம். ஸமுதாயவாதம், ஸௌத்ராந்திக வைபாஷிக புத்தவாதம்.

3. ஆகாசம் ஒரு பூதமாக புத்தர் கணிப்பதில்லை.

4. வாஸனை, வாசனை, ஸம்ஸ்காரம்.

இராவினில் கரணம் ஒடுங்கியே உறக்கத்(து)
இருக்கின்றான் எனும் அள(வு) உரைத்தான்

---

### உருவம் ஆதிய 5-இன் விரி

5. சுட்டிக்காட்டலால் அறிபவை உருவம்ஆம் ; அவைதாம்,
எட்டும் இந்தியம், விஷயம் என்(று) இருவகைஉறுமால் ;
ஒட்டும்இந்தியக் கரணத்தால் உணர்வதால் விஷயம்
தட்(டு)இலா அகச்சமுதயத்(து) எண்உறச் சமைந்த.

6. விடயம்இந்தியம்எனும் இவற்(று) உணர்ச்சி விஞ்ஞானம் ;
அடைவின் ஐங்குறிப்(பு) அறைகுவர், பெயர், பண்பு, செய்கை,
தடையுறுத்தும் நல்ஜாதியும், சிறப்(பு) உணர்ச்சியுமே.
விடைகளின்பெயர் இடபமாம் ; ஜாதி, ஆத்தன்மை ;

7. பகரும்அவ் விடைப்பண்பது வெண்மை ஆதிய ஆம் ;
நகர்தல் ஆதிய செய்கையே ; கொம்பு, வால்படைத்தல்
நிகர்இலாச் சிறப்(பு) உணர்ச்சிஆம் ; ஸௌகதர் இற்றே
பகருவார் ஐந்து ஸம்க்ஞை என்(று) உரைதரு குறிப்பே.

8. விடயஇச்சையும் புண்ணிய பாவமும் விளம்பின்
நடைபெறும் பல வாஸனைக் கந்தமா நவில்வர் ;
அடையும் இன்பமும் துன்பமும் அவற்றின் நீக்கமுமே
கடையில் கூறிய வேதனைக்கந்தம் என்று அறிக.

9. இந்த ஐந்தினைத் தவிர்த்து வே(று) ஆத்துமா இல்லை ;
கந்தம் அன்றி ஓர் இறைவன் உள்ளான் கருத்தாஆய்
அந்தமா எனல் அடாததாம் : ஜகத்தினுக்(கு) உதவி
சொந்தமாய் அதன் அகத்தின்(ஏ) உள்ளது தோய்ந்தே.

---

5. எட்டும் - அறிகின்ற. சமுதயம், சமுதாயம், கூட்டம்.

7. ஸௌகதர் - புத்தர். ஸம்க்ஞை - குறிப்பு; சஞ்ஞை என்றும் தற்பவமாக்கிக் கூறலாம்.

8. வாஸனை, ஸம்ஸ்காரம். கந்தம் - ஸ்கந்தம் அல்லது உணர்ச்சியின் தொகுதி, தண்டுபோன்றது. கந்தமா, ஸ்கந்தமாக. கடை, கடைசி.

9. ஜகத்(து) தானேபிறந்தது, தன்னிலே சார்ந்தது, தன் ஒழுங்குப்படியே நடப்பது என்பதும் அதற்கு நடத்துவோன் அக்கரையில்லை என்பதும் புத்த வாதம்.



விராவு பின்விழிப்பில் தூங்கினேன் முன்னர்
விழைவொடும் எனும் நினைப்பு அடைவான்

---

10. கணம் நிலைத்(து) உறும் கந்தம் தோன்றிடும் அகத் தொகுதி ;
கணம் நிலைத்(து) உறும் அறிவின் ஆம் புறச் சமுதாயம்.
தண(வு)இல் முன்கணக் கந்தநின்(று) அணுவினின் நின்றும்
அணவும் பின்கணக் கந்தமும் அணுவும் இங்(கு) அடைந்தே.

11. முன்பு பெற்ற(து) ஓர் அறிவின் நின்(று) அடை(வு) உறும்மொய்ம்
பின்பு சேர்உறும் அறிவும் ; இஃ(து) அது எனும் அறிவும் [பில்
முன்பின் இச்சுடர் அதேசுடர் எனு(ம்) முரண்போலப்
பின்புவந்த(து) ஓர் மயக்கம் ஆம், பேசுங்கால், அறிக.

12. விடயி ஆகும் ஆன்மாவிலும் விஷயமாம் ஜடத்தும்
அடைய உள்ளது (ஓடு) ஒளிர்கின்ற(து) என்னும் அவ் எண்ணம்
இடையில் தள்ளலும் கொள்ளலும் இல்லையால் மயக்(கு) ஆம் ;
தடையில் வான் ஒளிர்கின்றதா ? எனும் இவை மறுக்கும்.

### சூன்ய வாத மறுப்பு

13. ஜகத்தின் காரணம் சூனியமே எனின், ஜகமும்
இகத்(து) அமைந்திடாது ; அறைபவர்ஆர் குடம்இல்லம்
உகத்த ஆடை ஆதிய எலாம் சூனியம் என்ன ?
ஜகத்(து) எதிர்புலப் படாத(து)ஆம் நரன்றன்கோ(டு) எனவே.

14. பொருளை வேண்டுவோன் தேடுதற்(கு) ஒன்றுஇலை; பொறுக்காப்
பொருட் சுமையினை உற்றவன் எப்பொருள் ஒழிப்பான் ?
தெருளின் 'சூனியம் ஜகமுதல்' எனச்சொலல் தகாதாம் ;
அருளுவோன் எவன், மறுப்பவன் எவன், ஆன்மா இலையேல் ?

---

10. அணவும், வந்தடையும்.

11. பின்பு சேரறிவு முன்புபெற்ற அறிவினின்றும் அடைவுறும் என்க. அடைவுறும், வந்துசேரும். முன்பின், மனோவலியோடு. முரண், பொருத்தமற்றது.

12. எனும் இவை, மேற்கூறிய சூன்யவாதம் ஆதிய மூன்றையும் என்க.

13. இல்லம் உகத்த - வீட்டினர் விரும்பிய என்க. ஜகம் இல்லை; இல்லையென்று சொல்பவரும் இல்லை; எல்லாம் மனிதக்கொம்புபோல் சூனியம் ஆம்.

தராதலத்(து) அந்தத் திருக்குரு மூர்த்தி
தக்ஷிணா மூர்த்திக்(கு)இந் நமமே.

---

15. பவஞ்சம் யாவையும் காரணம் இல்லவாய் அழியும் ;
நவஞ்செய் கந்தங்கள் அணுக்களை நண்ணுவித் திடுவான்
சிவன்எனும் ஒருமுதல் இன்றேல் சேர்க்கையும் கூடா ;
இவண்கடம்படம் ஆதிய சடம் ; உருத் தாமே.

16. மாண்பின் ஓங்குவேன் என்னவே மதிப்பவன் மயங்கிக்
காண்கின்றான் தனை ; ஒருகணத்(து) அழிந்தவன் மற்றைச்
சேண்பெறும் கணத்(து) இல்லையால், விரதங்கள் புரிதல்
வீண்முயற்சிஆம் ; செய்தவன் பலனுற்றோன் இலரால்.

பிரத்யபிக்ஞை மாயை அல்ல

17. முன்னர்ச் செய்ததை நினைப்பது மயக்கின் என்று உரைப்பின்
துன்னல் எவ்வகை ஊண்துய்த்தல் ஆதிய தொழில்கள் ?
முன்னும் இவ்வுணவு உறுதியை யளித்தலால் இதனை
இன்னும் உண்குவேன் எனச் சிசுதானும் ஓர்ந்து இயற்றும்.

18. இடம்அளிப்ப(து) ஆகாயத்தின் பயன்என இயையும் :
திடமுடன் பொருள் அறிபவன் செய்பவன் ஆக
நடவுதல் பயன் ஆத்துமாவுக்(கு) எனநவில்க ;
ஜடம்அலா அஃ(து) உறக்கத்தும் ஸத்சித் ஆநந்தம்.

19. என்ன ஏதுவால் ? என்றிடின், ‘ஸுகம் உற யானும்
மன்னி நல்துயில் கொண்டனென் எனமனத்(து) எண்ணிச்
சொன்னதூக்கத்தின் உணர்ச்சியும் இன்பமும் தோய்ந்தே
அன்ன ஆத்துமா இருந்தஓர் உண்மையான்’, என்க.

20. நினைவு கூர்ந்(து) அறியப்படுகின்ற(து) என் வழக்கால்
முனைவு பெற்ற(து) ஓர்விஷயம் ஆன்மாஎன மொழியின்

---

15. பவஞ்சம் - ப்ரபஞ்சம். கடபடங்கள் ஜடம் ஆதலின் சேர்ப்பவனாகிய ஒரு வனது (செய்பவன்) இல்லாமல் தாமே கூடமாட்டா.

17. பிரத்யபிக்ஞை - அடையாளம் அறிதல். முன்னர்ச் செய்ததை நினைப்பது என்றார் செய்யுளில். மேல் 20-வது செய்யுளில் நினைவு கூர்ந்து அறியப்படுகின்றது என்பதும் இதுவே.

20. அறியப்படுகின்றது என்பது ஆத்மாவை மற்றொன்று அறிகிறது என எண்ணி விஷயமே ஆன்மா என்னல் தகுதி அன்று. ஆத்மா தன்னையே



தனை உணர்த்திடும் கரும கர்த்திருத்துவம் சார்ந்த(து)
அனையசொல் : ஸ்வயம்ஜோதி ஆன்மா, தனை அறியும்.

21. உறக்கம் தன்னிலே மாயையால் ஜடம் எனமயங்கிப்
பிறக்குநல் உணர்வு இன்றி அந்தகன் எனப் பிறங்கும்
சிறப்பு உணர்ச்சி இல்லாதது விளங்கினும், தனையே
மறப்(பு) அரியதாய்ச் சுய ஒளியொடு மருவுறுமே.

22. மேலும்இச்சட உடலுக்குள் மேன்மைசார் இறையாய்ச்
சாலவும் பகுத்(து)அறிந்திட உள்ள(து); இம்மயக்கம்
ஆலும்எண்ணமே மகேசன்றன் மாயையின்வலி ; இம்
மால்ஒழித்திடல் மோக்ஷம் ஆம் மாந்தர்கள்தமக்கே.

ஆத்மாவின் உண்மை ஸ்வபாவம்

23. இல்லைஎன்னல் பொய்என்(று) உள(து)ஆக்கிய ஆன்மா,
சொல்லும் முந்நிலை தம்மினும் நீங்கியதாய், மெய்
புல்லினும் அதனோடு சேராத(து) ஆய், முஞ்சப்
புல்லின் நல்கொழுந்து, ஆலம்வித்(து), அரைஉரிபட்ட

24. வாழைத்தண்டு எனஉள்ள(து)ஆம் ; மற்றும் இப்புருஷன்,
கோழைசார் உறுப்(பு) இன்றியும், மாறுதல் கொளாதும்,

---

அறிகின்றது எனவே அதன் பொருள் ஆனது பற்றி ஆத்மாவிற்கு இயற்கை ஒளியுளது என்பது பொய்யாகாது. இதனைக் கருமகர்த்திருத்துவம் என்றார். என் வழக்கால், என்னும் வழக்கால்.

21 ஆத்மா, மகேசனது மோஹினி என்னும் பெயருடைய மாயாசக்தியால், குருடனுக்குப் பொருள் தெரியாதது போலத், தன்னைத்தான் உபாதி வசத்தால் அறியாது சிலகாலம் இருப்பினும், அது தன்னை மறக்க முடியாது சுயம் ஜோதியாய் விளங்கும். இக்கருத்தை அடுத்த செய்யுளில் காண்க.

22. இம்மாயையை மோகினிப் பெயராள் என்றார் வடமொழியில்.

23. முந்நிலை, மூன்று அவஸ்தைகள் : ஜாக்ரம், சொப்பனம், சுழுப்தி.

23. முஞ்சப்புல்லின் கொழுந்து உதாரணத்தால் ஆத்மாவின் ஒன்றும் தன்மையையும், ஆலவித்தின் உதாரணத்தால் ஆத்மா விரிந்த உலகுக்கு மூல காரணம் என்பதையும், உரித்த வாழைத்தண்டின் உதாரணத்தால் ஆத்மா மனிதனிடத்து அந்தர்க்கதமாயுள்ள ஸ்வாபவமென்பதையும் விளக்கினார். ஆலம் வித்து உதாரணம் சாந்தோக்கிய உபநிஷத் மந் - 12 - இல், கூறப்பட்டுள்ளது.

24. ஆத்மா, நிரம்சன், கோழைசார் உறுப்பிலான், நிர்விகாரன், நிராபாஸன் (மனமறிய நில்லாதவன்) நிரஞ்சனன் (மாசில்தாழுறுதவன்), பூர்ணன் (நிறைந்தவன்),முதற்பொருள், பரமேசுவரன், தனி, கேவலன்,(உபாதிரஹிதன்), என்றபடி.

பீழைசார் மனம் அறியநில்லாமலும், மாசில்
தாழுறுமலும், நிறைந்திடும் தனிமுதற் பொருளே.

25. சொல்ஒடுங்குறும் இடம்எது, தோயும் இம்மனமும்
நல் ஒடுக்கத்தைப் பெறநிற்ப(து) எங்கு, நல்பூதம்
பல்புவனம் தத்துவங்களும் கடல்படு நதிகள்
புல்ல, ஒன்றுவ(து) எவ்இடம், அவ்இடத்(து) "ஒன்றாய்

26. நிற்கும்தன்மையை உணர்பவற்(கு) உறும்துன்பம் யாது
முற்படும் மயக்கு எவ்வகை எய்துறும்?" மொழியின்
அற்பமும் அவன்றனைப் பந்தம் அணைவுஉறாது; அவற்கே
சொற்படும் பொருள்ஆய 'நான்' உண்மைதோய்ந்து ஒளிரும்.

27. பொருளினைப் பதம் உணர்த்தலால், 'நான்' எனும் பதத்தின்
பொருளினைப் பகுத்(து) அறிந்திடின், உடல் பொருந்திய 'நான்,'
தெருளின் ஒவ் ஒன்றாய்த் தத்துவம் நீக்கியே தெரித்துப்
பொருளினைக் கொளின், 'கேவலான்மா' எனப் பொருந்தும்.

28. "அறி(வு) உளோன் 'இலைபிரமமும்' என அறிந்திடினே,
செறியும் அன்னவனே இலன் ஆகின்றான்; ஸ்திரம்ஆய்
அறியின், 'உள்ள(து) அப்பிரமம்' என்று, அவன்தனை, அறிஞர்
அறிவர் உள்ளவன் ஆக." ஏன்? பிரமமே ஆன்மா.

ஆறவது உல்லாசம் முற்றும்

---

25, 26. "ஒன்றாய்நிற்கும் தன்மையை உணர்பவற்கு......எவ்வகை எய்துறும்?" இது ஈசாவாஸ்ய உபநிஷத் வாக்யம் (7). நான் கேவலான்மா எனப் பின்னர் விளக்கியிருப்பது காண்க.

27. நான் எனும் பதத்தின் பொருளினைப் பகுத்து அறிந்திடின், தெருளினால் தத்துவங்களை ஒவ்வொன்றாய் நீக்கித் தெரித்துப் பொருள்கொளின், உடல் பொருந்திய 'நான்' கேவல ஆன்மா எனப் பொருந்தும் என முடிக்க.

28. இச்செய்யுள் தைத்திரீய உபநிஷத் 2 - 6. பிரஹ்மம் இல்லை என்றால் அப்படிச் சொன்னவனும் இல்லாதவனாம். பிரஹ்மம் உள்ளதென்றால் அப்படிச் சொன்னவனும் ஸத்தாம். ஏனென்றால் பிரமமே ஆத்மாவாதலால் என்க. இவ்வாக்கியம் வடமொழி மூலத்தை விளக்கி இத்தமிழாசிரியர் தந்தது.



# ஏழாவது உல்லாஸம்

## ஆத்மா நித்தியப் பிரகாசன்

7. இளமை ஆதியும் நனவுமுன் அவையும்
இயம்பும் எல்லா நிலைதாமும்

---

**பிரத்யபிக்ஞை (நினைவு கூர்தல்) பிரமாணம் ஆகுமா?**

1. 'நினைவு கூர்வதன் வலிமையால் நித்தியம் ஆன்மா'
அனைய தன்மையை அறி(க) என்றீர், அந்நினைப் பதுதான்
வனையும் காட்சிமுன் ஆறனுள் மதித்(து) எணல் இன்றால்,
பினையும் அன்ன(து) எவ்வகைப் பிரமாணம் ஆம் பேசீர்.

**பிரத்யபிக்ஞை ஆத்மா நித்யம் என்பதை நிரூபிக்கிறது**

2. முன்பும் ஓங்கி இப்பொழுதினும் ஓங்குவ(து) ஒன்றை
அன்பின் அன்ன(து) ஈ(து)என நினைவோடு உணர்அறிவே
என்பரால் பிரத்யபிக்ஞை என் நினைவுகூர் உணர்ச்சி.
தன்பழ இடம்கால ஆகாரங்கள் தள்ளி.

3. ஓர்பொருள் தொடர்ந்(து) எப்படி நிற்பதாய் உணரும்,
சீர்பெறும் அந்தத் தன்மையின் ஆத்துமா தெரியும்;
ஏர்பெறாத சிற்றுணர்வு முன் மாயையை எறிந்தே
நேர்பெறும் பரிபூரண அறி(வு) அதன் நினைவாம்.

---

7. இளமை ஆதிய, வாலிபம், கௌமாரம், யௌவனம், மூப்பு என்பன. நனவு முன் அவை நனவு, கனவு, உறக்கம் எனும் 3. எல்லா நிலை தாமும் என்றது மூர்ச்சை, நோய், வறுமை, செல்வம், பொறி விழைச்சு என்பனவாம். இம்மூலச் செய்யுளில் வந்துள்ள 'உயர் சின்முத்திரை' என்பதை சின்முத்திரை அதாவது உணர்ச்சி அடையாளம், வியாக்கியா முத்திரை அதாவது பொருள் வெளிப்படுத்தும் அடையாளம், தர்க்க முத்திரை அதாவது விசாரணை செய்யும் குறி, அல்லது ஞான முத்திரை அதாவது அறிவு அடையாளம் எனக் கூறுவர். அம்முத்திரை அல்லது வட்டம், கட்டை விரலையும் ஆள் காட்டி விரலையும் சேர்ப்பதால் உண்டாவது.

1. அறிக என்றீர் என்பதை அறிகென்றீர் என இயைக்க. காட்சி, அநுமானம், சப்தம், உபமானம், அருத்தாபத்தி, அபாவம் என்னும் வேதாந்தப் பிரமாணங்கள் ஆறு என்பதை 2-வது உல்லாஸம் 16, 17 செய்யுட்களில் காண்க.

2. பிரத்யபிக்ஞையின் பொருளை விளக்கினார். பழ - பழைய. ஆகாரம் - வடிவம். என், என்கின்ற.

3. சிற்றுணர்வு முதலாய மாயை என்க.

வளம் அழிந்(து) ஒழியத் தொடர்ந்து நிற்பது வாய்
மருவி, நான் என்(று) எலாக்காலும்

---

4. கன்று தாய்முலை உணும் கருத்தொடு தலைப்படுதல்
அன்றுமுன் வந்த பிறவியின் வாசனை ; அதுபோல்
என்றும் உள்ள ஆன்மா பல உடம்புகள் தோறும்
சென்று நிற்பதாம், வேறுபா(டு) எத்தனை செறிந்தும்.

5. தாயின் பால் குடி தலைப்படல் குழவிக்கு நினைவின்(று)
ஏயுமோ? அந்த நீதியின் முன் அநுபவத்தும்,
ஆயின், பின் நினைவு எய்திடும் ஸமயத்தும், ஆன்மா
தோயும் உள்ளத்துள் கொள்ளுறும் தோய்ந்த வாஸனையே.

6. பிரத்யபிக்ஞை பல் பொருள்களின் நினைவு எனின், ஆன்மா
திரத்தின் உற்றது ஆம் என்பதில், நினைவு நல் அளவைத்
தரத்தை எங்ஙனம் அடைகுறும்? நினைவினில் சார்ந்த
அருத்தக்(கு) ஓர் ஒளி இலை ; அதன் அநுபவத்தினுக்கும்

7. விளக்கம் செப்புதற்(கு) இல்லை ஆம், விரல் இரண்(டு) எனவே ;
அளக்கும் கோல் உளோன் என, அநுபவம் உறுபொருட்கும்
விளக்கம் இல்லை ; என்னே எனின், 'எங்கும் இப்படியே
களக்கம் இன்றி இவ்வாறு எனல்' ஆதலால் ; கேண்மோ.

---

4. வாஸனை, பழையஞாபகம், ஸம்ஸ்காரம் என்பதும் அதுவே. நனவு, கனவு, சுழுத்திகளில் ஆத்மா மாறுதல் அடையாதது போலவும், பால்யம், கௌமாரம், யௌவனம், வயோதிகம் ஆதிய பருவங்களில் ஆன்மா மாறுதல் அடையாதது போலவும், தேவ திர்யக், மனிதப் பிறவிகளை எடுக்கும் போதும் ஆன்மா ஒரு படித்ததாய் இருக்கிறது. 5 - 7. பிரத்தியபிக்ஞை என்பது பிரத்தியக்ஷப் பிரமாணத்தில் கூட அடங்கும். இது அநுபவப் பிரத்தியட்சம் ஆம். சாதாரணப் பிரத்தியட்சப் பிரமாணத்தில் இந்திரியங்களின் அசதியால் பிராந்திகூட உண்டாவதால், இப் பிரத்யபிக்ஞை, இந்திரிய உணர்ச்சியோடு நில்லாமல் பூர்வ வாஸனையும் கூட்டி உண்மை அநுபவத்தை அளிக்கிறது. இதில் ஒரு ஆட்சேபனை : பிரத்யபிக்ஞை என்பது பூர்வ ஞாபகம் தானே. அந்த ஞாபகத்தில், பிரத்தியட்சமாக இரண்டு விரல்கள் என்று பார்ப்பது போல ஏதும் உண்மை அநுபவம் இருக்கமுடியாதே என்பது ஆசங்கை : நினைவு மாத்திரம் பிரமாணம் என்று வேதாந்தி கூறுவதில்லை. ஆத்மா தொடர்ந்தில்லை ஆயின் பூர்வ நினைவு (பிரத்யபிக்ஞை) உண்டாகாது என்பதே அவனது கொள்கை என்பது அவ் வாசங்கைக்குப் பதிலாம்.



உளம் ஒளிர்சொந்த ஆத்துமா தனையார்
உயர் சின்முத் திரையினுல் தெரிப்பான்

---

**வாஸனை, ஸம்ஸ்காரம் அல்லது முன்நினைவு**

8. முன்அநுபவம் அழிந்திட, முதல்என அதைக்கொண்(டு)
இன்னும் பின்னரும் ஏய்வதாய் ஆத்துமத்(து) இயைந்து
துன்னுறும் சமுக்காரம் என்பெயரிதாய்த் தோய்ந்தே.
மன் உபகரணத்தி னின்(று)எழுவது நினைவே.

9. நன்னர் ஓங்குறும் விஷயத்தின் அநுபவம் நலிய,
முன்அநுபவ விஷயத்தில் மூழ்கிய ஆன்மா
தன்னமும் அழியாத(து) என்று அறிவிக்கும், நினைவு ;
மன்னுகின்ற நல்விஷயமும் அநுபவம் தானும்.

10. மறையும் ஆயினும், ஒருபொழுதும் மறையா(து) ஆய்
நிறைவின் ஓங்குறும் ஆத்துமா, தன்னிடத்(து) உறைந்தே
மறைபொருளினை நினைவு கூர்கின்றதால் மதிக்கின் ;
அறைவர் அன்னதால் ஆத்துமா திப்பியம் எனவே.

11. உறக்கம் தன்னிலே ஆத்துமா மறைகின்ற(து) உரைக்கின்,
துறக்கும் மாயைஆம் இருட்டினுல் தோன்றுவ(து) அன்றி
உறக்கம் தன்னில் ஆன்மா என்றும் ஒழுகுவ(து) இன்றும்
சிறக்கும் மாயைதான் யா(து) எனின், செப்புவல் கேண்மோ.

---

8. ஸம்ஸ்காரம் என்பதை சமுக்காரம் எனத் தற்பவமாக்கினுர். பிரத்யபிக்ஞை அல்லது நினைவு என்பது இன்னதென்று கூறினுர். என் பெயரிதாய், என்னும் பெயரை யுடையதாய்.

9. நினைவு அறிவிக்கும் எனக் கூட்டுக.

10. விஷயம் ஸம்ஸ்கார ரூபமாக ஆத்மாவில் தங்கி மறைந்து நிற்கிறது என்க. அதனுல் ஆத்மாவுக்கு அந்நினைவு போவதில்லை. திப்பியம், தெய்வத் தன்மை வாய்ந்தது.

11. மாயை என்பது சூரியனது நிழல் போலவும் ஞானம் என்பது சூரியனது ஒளி போலவும் ஈசுவரனது இரண்டு சக்திகள் என்பதனைப் பின்னர் விளக்குகிறுர்.

தெளி(வு)உற அந்தத் திருக்குரு மூர்த்தி
தக்ஷிணா மூர்த்திக்(கு)இந் நமமே.

---

12. ஆதவன் தரும் ஒளிஎன நிழல்என அவன்பால்
ஓதும் ஞானமும் மாயையும் சக்தியாம் ; மாயை
ஓதி தன்னையும் மறைத்திடும் ; உரைத்திடும் ஞானம்
ஏதம் நீங்குற எவற்றையும் காட்டுறும் அன்றே.

13. யாதுபற்றி எவ்அளவையும் கைவந்த(து) ஆகும்,
ஓதும் அந்த ஆன்மாவின் நேர், உணர்ச்சியே ஒளிரும் ;
வாதுதீர, ‘நான்வே(று) இறைவே(று)’ என மதிக்கும்
தீதுகூறும் அம்மாயையை நீக்க, ‘நான் இறைவன்’

14. என்னும்அந் நினை(வு) எழும் ; அதுதான் பிரத்யபிக்ஞை ;
மன்னன் மாயையால் மறைபட்டோன் விளங்கினான் சிறிதா ;
துன்னும் அத்திரை முழுவதும் தீர்ந்தபின், சூரன்
தன்ஒளியின் வான்விளங்குதல் எனத்தனி விளங்கும்.

15. காரணங்களின் செய்கையால் இஃ(து) உரு(து) ; அறியும்
ஏரணங்களின் செய்கையாற் காட்டுறப் படாதாம் ;
ஓர்அணங்கு எனும் அவித்தையை ஒழித்தல் மாத்திரமே
சீர்எனும் பிரத்யபிக்ஞையாம் நினைவு சேர்வதுவே.

---

12. மாயையும் ஞானமும் ஈசுவர சக்தியாதலால் பந்தத்துக்கும் மோட்சத்துக்கும் அவை காரணமாகின்றன. ஓதி - ஞானம்.

13. ஏதம், மாயையாகிய மறைப்பு என்க. கைவந்ததாகும் நேர் உணர்ச்சியே (அதாவது ஞானமே) எனக் கூட்டுக.

14. மன்னன், ஈசுவரன் : மாயையால் மறைபட்டுச் சிறிதாக ஈசுவரன் விளங்கினான். அத்திரை முழுதும் தீர்ந்தபின் சூரியன் தன் ஆயிரம் கிரணங்களோடும் வானில் ஒளிர்வதுபோல ஆன்மாவாகிய ஈசுவரன் பூரணனாய் விளங்குவான்.

15. ஏரணம் - அளவை. அணங்கு - சக்தி, ஈண்டு மாயையாகிய ஈசுவர சக்தியைக் குறித்தது : அணங்கு நோயும் ஆம். நினைவு கூர்வது என்றால் அவித்தையை அல்லது மோகத்தை ஒழிப்பதாம்.



### அத்தியாஸம் அல்லது கற்பனை

16. சடத்(து)அணைந்து பொய்த்தன்மைவாய்ந்(து) எல்லைக்குள் சார்ந்த
கடத்(து) அள(வு) என, அறி(வு) உருஆகும் ஆன்மாவைத்
திடத்தின்எண்ணலும், மெய்அறிவு இன்பத்தை உடல்என்று
எடுத்(து)உரைத்தலும், இப்பியின் வெள்ளிபோல் மயக்கே.

17. வெள்ளி, உள்பொருள் ஆயிடின், அதற்(கு) அழிவுஇலைஆம் ;
உள்ளின், முற்றுமேஇல்பொருள் மனிதன்கோ(டு) ஒப்பத்
தெள்ளிதின் எந்த இடத்தினும் ஒளித்தல் சேராதாம்;
‘வெள்ளி ஈது எனக் கண்டதும் நினைத்ததும் மயக்கே.

18. இம்மயக்கினில், மாதர்கை பிறவற்றின் இருக்கும்
அம்மை வெள்ளியை நினைவு கூர்தரல் அவசியம் ஆம் :
இம்மையின் எனின், மயக்கம் ஒப்புமையினால் எனினே
செம்மையாக அவ்வகை நிகழ்(வு) எய்துறும் செப்பின்.

19. ‘சங்கு பொன்நிறம் உள்ளது’ ‘சருக்கரை கைப்பாய்
இங்(கு) இருக்கின்றது.’ என்பவற்(று) உவமையே கிடையா ;
அங்கம்ஆக ஈ(து) ஓர்ந்திடில் காண்பவன் நோயே
எங்கும் காரணம் ; மயக்கு ஒப்புமையின் எனல் பொருந்தா.

---

16. சரீரத்தின் இலக்கணங்களைக் கூறி, இச் சரீர லக்ஷணமே ஆன்ம லக்ஷணம் என்பதும், ஆன்ம லக்ஷணங்களைக் கூறி அவ்வான்மா உடலே என்பதும் சிப்பியை வெள்ளி என மயங்குவது போலாம் என்பது கருத்து.

உள்பொருள் ஸத்து ; இல்பொருள் அஸத்து. வெள்ளி உள்ளபடியே இருந்தால் அறிவு வந்தபின் அது மறையாது. வெள்ளியே இல்லை என்று சொல்லுவோம் எனில் அவ் வெள்ளித் தோற்றம் கண்ணிலேயே பட்டிருக்க முடியாது. அதனால் சிப்பியில் வெள்ளி மயக்கத்தால் வந்ததென்க.

18. இம்மயக்கம் நினைவினால் வந்ததா ? ஸாம்யத்தினால் வந்ததா ? என்பது கேள்வி. நினைவு என்றால், அவ்வெள்ளி ஸ்திரீகளது கைகளில் கண்டது போலவோ அல்லது முன்பு காணப்பட்ட பிற உருவங்களைப் போலவே தோற்றவேண்டும். ஒப்புமை என்றால் சிப்பியின் உருவும் அவ்வெள்ளியின் உருவும் இரண்டும் ஏககாலத்துக் கண்ணிற்பட வேண்டும்.

19. மஞ்சட்காமாலையால் சங்கு மஞ்சள் நிறமாகவும், ஜுரமுண்மையால் சர்க்கரை கசப்பாகவும் அநுபவிக்கப்படும்போது இந்நிறங்களுக்கும் உருசிகளுக்கும் உவமம் என்பதே இல்லை. அதனால் மயக்கம் ஒப்புமையால் வந்ததெனல் பொருந்தாது.

20. இப்பி பேதம்இல் உணர்ச்சியால் வெள்ளிஆய் எதிரே
செப்ப ஓங்கின், அவ்உணர்ச்சியே மயக்கத்தின் பற்(று)ஆம் ;
'எப்படிப் பினர் மயக்கு உறும் ?' என்றிடின், எதுமுன்
செப்ப வெள்ளியாக் கண்ட(து), அஃ(து) இஃ(து) அலஎன்றே.

21. முன்உணர்ச்சி பின்உணர்ச்சியால் முருக்குஉறும் ; அறிவில்
மன்னும் வெள்ளிதான் புறம் புலப்படும் எனின், குன்றி
தன்னில் அங்கியை உட்கொளின் உடல்எரித் திடுமோ ?
அன்ன தன்மையின், ஊகம்இல் தோற்றம்ஆம் மயக்கின்.

22. இலக்கணம் சொலலொன்(று) இலை ; ஏகம்ஆம் மதி, நீர்
இலக்கம் இல் மதி ஆய் எழும் ; கயிற்றினின் அரவாய்த்
துலக்கமும் என உபாதியும் அச்சமும் துலங்கும் ;
அளக்கின், பொன்னில் ஆபரணம்போல், ஆன்மமே உல(கு)ஆம்.

23. இப்பி வெள்ளியின் இருந்திடும் நிலைமையின், வானத்(து)
ஒப்(பு)இல் கந்தர்ப்ப நகர்என வியாபக ஒழுக்கின்
செப்பு கானலில் நீர்எனச் சேர்சுய ஒளியின்,
துப்பில் குற்றியில் மகன்எனச் செயல்இலாத் தோய்வின்,

24. இல்பொருளினை ஒத்த இப் பவஞ்சமும் மயக்கின்
உள்பொருள் எனும்ஆன்மத்துத் தோற்ற உற்றிடும் ; மால்

---

20-25. இப்பியே கண் படாமல் வெள்ளி தான் அறிய நின்றதென்னில், அவ்வறிவு மயங்கிற்றென்பதாம், உண்மையில் வெள்ளி இல்லை ஆனது பற்றி. அநுபவத்தின் ஒரு பகுதி உண்மைக்கு மாறாய் ஏற்பட்டபோது மற்றப் பகுதியும் உண்மையல்ல என்னில் அப்பொழுது மாயை சூன்யம் என்றாகும். சிலர் வெள்ளி தான் உண்மை, சிப்பி மயக்கம் என்று ஏன் கொள்ளலாகாதென்பர். குன்றுமணியிடத்துத் தோன்றிய நெருப்பு உடலை எரிக்காததுபோல, அவ் வெள்ளி பயன் தருதலில்லை என்க. அதனால் மாயையை ஸத்தென்றாவது அஸத்தென்றாவது சொல்ல முடியாது. இரண்டில் ஒன்றுதான் என்று நிச்சயமாகச் சொன்னால் அது மாயையும் ஆகாது; அதனை அறிவு போக்கவும் முடியாது. நம் அநுபவம் அறிவு மாயையைப் போக்குவதே ஆனதுபற்றி வெள்ளியைநாம்கண்டது இவ்விரண்டில் ஒன்று என்னல்தகாது. அதனால் ஆன்மாவே மாயையால் உலகமாகக் காணப்படுகிறது. எதுபோல எனின் : சிப்பியில் வெள்ளிபோல, இருப்பிலும், வானில் மேகம் (கந்தர்வ நகரம்) போல, வியாபகத்திலும், கானலில் நீரைப்போலச், சுயஒளியிலும், மரத்தில் திருடனைப்போல்



விள்ள, மாலொடு கே(டு) இலா உண்மைதன் ஒளியின்.
உள்ள தன்மையின் முன்உறும் ; உபாதிகள் ஒழியின்,

25. உடல் விளங்கிய ஆன்மமே மகேசனாய் ஒளிரும் ;
மடன் ஒழிந்திடச் சுருதிஆம் ஆப்த வாக்கியமே,
திடன்பெற இதைச் சாதிப்பான், நினைவொடு காட்சி
யுடன் விளங்குறும் ஐதிகம் இவற்றினை உரைக்கும்.

ஏழாவது உல்லாஸம் முற்றிற்று

---

(குற்றியில் மகனைப்போல), தொழிலிலாத் தன்மையிலும் ஆன்மா உலகமாய்க் காணப்படுகிறது என்க. உபாதி ஒழிந்தால் ஆத்மாவே மகேசுவரன் ஆக விளங்கும். சுருதி கூறுவதாவது : 'ஸ்மிருதி, பிரத்தியக்ஷம், ஐதிஹ்யம், சுத்த அநுமானம்—இவற்றால் எல்லாம் சூரியன் அறியப்படவேண்டும்' என்னும் தைத்திரீய ஆரண்யக வாக்கியம் (1-2) ஆம். ஸ்மிருதி பகவத்கீதை முதலிய போன்றன. பிரத்தியக்ஷம், ரிஷிகளின் ஸ்வாநுபூதி. ஐதிஹ்யம் ஆரூடர்களின் பரம்பரா உபதேசம். அநுமானம், ஊகித்தறிவது. இவை எல்லாம் பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்று என்றே குறிக்கும்.

## எட்டாவது உல்லாஸம்

### மாயை

8. காரியம், கருவி, பொருள், பொருள் படைத்தோன்,
கருதுறு குருவொடு, சீடன்,

---

**உலக வியவஹாரமும் வேத வியவஹாரமும் முரணாது எனல்**

1. ஒளியின் வேறு ஒன்றும் இல்லையேல் ஒருபரம் பொருளைத்
தெளிய ஊட்டுங்கா(று) உள்ளன எவ்வகை நிகழும்?
விளையும் பந்தமும் மோக்ஷமும் எவனுக்(கு)? எம்முறையால்?
உளையும் மாயை யாது? என, விடை உரைத்தனர் குருவே.

2. முன்னர்க் கூறிய முற்றுமே சுருக்கினர் மீண்டும்;
நன்னர் இன்னது 'கூறிய கூறல்' ஆ நவிலின்
உன்னரும் பொருள் உண்மையை உரைத்தல் அக்கணக்கின்
மன்னுரு(து)என மதிக்கொள்(க)எனத் தொகுத்து உரைத்தார்.

3. தன்ஒளியுடன் உண்மையாம் உருவனே ஈசன்
என்னினும், பல காரண காரியம் இயைத்துத்
துன்னுகின்றதா எண்ணுதல், இராகுவின்தலை, வான்
மன்னு நல்வெளி, என்னுடை ஆத்துமா, மற்றும்,

---

2. அவாங் மனோகோசரமான பொருளை உணர்த்தும் இந்நூல் விஷயத்தில் மேற்போன ஏழு உல்லாஸங்களின் விஷயங்களையும் சுருக்கிச் சொல்லுதல் 'கூறியது கூறல்' என்னும் குற்றம் ஆகாது என்றார். கொள்க என, கொள்கென எனச் சேர்க்க.

3. ஸத்தும் சித்துமாய் உள்ள ஆத்மாவைக் காரண காரிய சம்பந்தமாக நினைத்தல் பொருந்தாதென்பதற்குச் சில உதாரணங்கள் கூறி விளக்குகிறார். ராகுவின் தலை. வான சாஸ்திரத்தில் சந்திரனை மறைக்கும் நிழலை ஏறு நிழல் இறங்கு நிழல் என இரண்டாகக் கண்டுள்ளார்கள். ஏறு நிழலுக்குத் தலை அல்லது ராகு என்றும் இறங்கு நிழலுக்குக் கேது அல்லது வால் என்றும் பெயர் தந்துள்ளார்கள். ராகுவின் சிரம் என்பதனால் ராகு வேறு சிரம் வேறு எனக் கொள்ளல் தகாதுபோலவே 'பரமேசுவரன் ஜகத் காரணன்' என்னும்போது, பரமேசுவரன் வேறு ஜகத் வேறு, பரமேசுவரன் காரணன், ஜகத் காரியம் எனக் கொள்ளுதல் பொருந்தாததாம். பரமேசுவரனே ஜகத் என்க. இதைப் போலவே, வான்வெளி, என் ஆத்மா, பிரதிமையின் உடல் என்பவற்றையும் கருதிக் கொள்ளுக.



ஏர்உறு பிதா,ஸத் புத்திரன் ஆதி
எண்ணுவான் வேற்றுமை உளத்தில்

---

4. சிலையின்மெய், எனச்செப்புதல் போன்று கற்பனையாய்
உலைவுஇல் மற்றொரு பொருளினைக் குறித்திடாதுஆகும்;
தலைவனே, வணக்கு உரியவன் வணங்குவோன், சீடன்
மலை(வு)இல் ஸத்குரு, நாயகன் ஊழியன்,மதிக்கத்

5. தன்ன(து) இச்சையால் மாறுதோற்றம் பெறத் தயங்கும்;
முன்னர்ப் பிள்ளை, தன்மகன் தனக்குப், பிதா ஆயின்,
என்ன சொல்லுவோம். பொருள் ஒன்றே வேற்றுமைஆக
நன்னர்ச்சொல் அள(வு) அறைபடல் காண்குவம் நலக்க.

**மித்தையின் பொருள்**

6. உண்மை ஆய்ந்திடின் விளக்கமே உள்ளது; மாயைத்
திண்மையால் உற்ற ஆன்மமேதத்(து) உணர்(வு) இழுக்காம்;
உண்மையில், 'பொய்மையாது'எனின், உண்மை ஞானத்தே
இன்மை எய்துவது எது, அதுதான் பொய்மை என்ப.

**பொய் துவாரா மெய்யுணர்ச்சி ஏற்படும்**

7. சீடற்குக் குரு செப்புதல் ஆதிய பிறவும்
நாடின்நல் கன(வு) ஒத்தன; நவிலும் வேதாந்தம்
ஆடிநல்உரு, சிலைத்தெய்வம், சித்திரம், அவைபோல்,
தேடும் உண்மையை அறிவிக்கும் பொய்ம்மையே தேர்க.

**ஞானத்தால் மாயை ஒழியும்**

8. படத்திற் கண்டிட்ட புலிகண்டு பயப்படும் சிசுபோல்
திடத்(து)உறும் விவகாரங்கள் மாயையின் சிறப்பாம்;

---

5. நாலு ஐந்து செய்யுட்கள் ஒரு தொடர்.

6. ஆன்மாவில் பேதவுணர்ச்சி பொய்யாம். பொய்மையாவது, ஞானம் தோன்றின அக்கணத்தில் இல்லாமற் போவதாம்.

7. குருசீடனுக்கு உரைப்பது போன்ற செயல்கள் யாவும் கனவு போன்றனவே. வேதாந்தமும் தன்மட்டில் பொய்தானாயினும், கண்ணாடியின் உருவத்தைப்போலவும், கல்லுருவில் தெய்வத்தைப் போலவும், சித்திரத்தைப்போலவும் வஸ்து உண்மையை உணர்த்தி நிற்பதற்கு உதவுகிறது என்பதை யறியவும்.

8. நமது உலக அநுபவம் படத்திற் கண்ட புலியைக்கண்டு சிசு பயப்படுவது போன்றதோர் மாயா விகாசமாம். ஸுஷுப்தியில் அல்லது நல்லுறக்கத்தில் ஒன்றும் இல்லாமற் போவதுபோல, அறிவு வந்தபின் மாயை விலகி

சீர்அறு மாயை மயக்கினால் கனவில்
செப்பிய நனவிலும் எவனோ,

---

மடத்(து) உறங்கிய தன்மையின், வயங்கும் அம்மாயை
துடைப்(பு)உறும், அறி(வு) எழுந்தஅக் காலையின், தொகுப்பின்.

### மாயை இன்னது என்பது

9. யுக்திஅற்ற ஓர்விளக்கமே மாயை ஆம் ; யோசித்(து)
எத்தும் ஓர்பொருள் தன்னை இங்(கு) அழிக்கலாம், இதனால்
தத்துவக்குணம் உள்ள(து)அன்று ; அயர்ப்பினில் காண
ஒத்ததால் அதை இல்லைஎன்று உரைத்தலும் அடாதே.

10. குருடன் கண்படும் ஆதவன் நிழல்என, ஒளியின்
பிறி(து)எனல் தகா(து) ; அறி(வு)இலாச் சடம்அதாப் பிறங்கும்
உரிமையால் ஒன்(று)என்(று) உரைக்கவும் இயலுரு(து) ;உற்ற
முரணதால் இருதன்மையும் அன்(று)என மொழிப.

11. தனக்கு மூலம்ஆம் உறுப்(பு)இன்றித் தயங்கலால் அதனைக்
கனக்கநல் உறுப்(பு) இல்ல(து)ஓர் அநாதியாய்க் கணிப்பர் ;
மனக்(கு)உறும் அதன் காரியங்கட்(கு) உறுப்(பு)உளதால்,
தனக்(கு) உறுப்(பு)இலை எனஅதைச் சாற்றலும் தகாதே.

---

விடும். மடத்து, அறியாமையின் என்க. மாயை தொகுப்பின் (கொத்தோடு) துடைப்புறும் என்க.

9. யுக்தி அற்றது, இன்னதென யோசித்து அறியப்படாதது. மாயை ஸத் அன்று ; யோசனைசெய்து (அறிவினால்) மாயையை இல்லாத தாக்கிவிடலாம். மறப்புக் காலத்தில் அது காணப்படுவதால் அதை அஸத் என்னலும் தகாது.

10. சூரியனைக் குருடன் நிழலைப்போலக் காண்கிறான். அந்நிழலை ஒளியினின்று பிரிப்பதுபோல மாயை ஒளியினின்றும் வேறு என்று சொல்லவராது. மாயை ஜடம் ஆதலின் அது ஒளியோடு அபின்னமானதென்று சொல்லவும் முடியாது. பரஸ்பர விரோதமாயுள்ள முரணால் அது பின்னாபின்னமெனும் உபயமும் அல்ல.

11. மாயைக்குக் காரணமான உறுப்புக்கள் இன்மையால் அம்மாயை உறுப்பற்ற அநாதி என்பர். மாயையின் செயலாக வந்த காரியங்களுக்கு அவயவமிருப்பதால் அம்மாயையை அவயவ ஹீனமானது என்றும் சொல்லத் துணியார். தனக்கு, அதற்கு என்னும் பொருளில் வந்தது.



தார்உறும் அந்தத் திருக்குரு மூர்த்தி
தக்ஷிணா மூர்த்திக்(கு)இந் நமமே.

---

12. மாயை ஆகும்இப் பகட்டுறும் வேசையும், மதியின்
ஆயநின் றிடா(து) அமைந்தவள், போலிஆம் தனது
காயம் உற்ற பல் தளுக்கினால் புருஷனைக் கடிதே
மாயம் ஆற்றித் தன் வசப்பட மனம்பறித்திடுவள்.

### மோக்ஷம் என்பது மாயையின் களைவே

13. இவளை வேரொடு தொலைந்திடச் சிலர் விரும்பலரின்,
தவர்தம் கொள்கையின் மனம்விடல் எப்படி அமையும் ?
புவனம் தன்னில் முந்நிலைமையும் வேற்றுமை பொருந்தும்
கவனம்ஆர் முதற் கருவிஆய், உருள்எனச் சுழலும்.

14. வேற்றுமைப்படும் மால்களால் மனம்தொழில் விளைக்கும் ;
ஆற்றும் அத்தொழில் மனத்தினைப் பந்தத்தின் அமைக்கும் ;
சாற்றும் ஆத்துமா மனம்கடந்(து) அமைந்த(து)ஆய், வே(று)ஆய்,
போற்றும் பானுவின், காட்சிஆய்ப் பொருந்தி நிற்பதுவே.

15. உயிர்க்(கு)எலாம் ஒருகண் எனும் ஆதவன், உயிர்கள்
அயிர்ப்பினோ(டு) அறிவோ(டு) இவண் ஆற்றுறும் தொழிலால்
செயிர்ப்(பு)உறக் கட்டுப் படுவ(து)இன்(று);ஆத்துமா, அதுபோல்
பயிர்ப்புஉறும் மனச்செய்கையால் பந்தமும் உறுமே

16. சாட்சிஆகவே நிற்றலின், சாற்றுறும் அதுதான்
ஆட்சியாத் தொழில்புரிந்ததாக், கட்டினின் அணைந்தே
மீட்சி உற்றதா விளம்புதல் மங்கல வழக்கே ;
சாட்சிஆம் அதை, மயக்கினால், வினைஞன் என்(று)உரைப்பார்.

---

12. புத்தி பரிசீலனை பண்ணத் தொடங்கின் மாயையின் தளுக்கு அழியும் என்க. என்றாலும், மாயை என்னும் வேசை தன் வஞ்சனையினால் புருஷனாகிய ஆத்மாவைத் தன் வசப்படுத்திக் கொள்ளுகிறாள் என்க.

13. மாயையை அறஒழிக்க முயலாதிருக்கு மனத்தினின்றும் விடுதலை ஏற்படாது. பேதப் பிராந்திக்கு ஏக காரணமான இம்மனதே சக்கரம்போலச் சுழன்றுவரும் நனவு, கனவு, சுழுத்தி என்னும் மூன்று அவத்தைகளுக்குட் படும்.

15-16. ஆதவன் உயிர்களின் செய்கைகளாற் கட்டுப்படாதது போல ஆத்மா மனத்தின் செய்கைகளாற் கட்டுப்படாது. ஆத்மாவைக் கர்த்தாவென்பது மாயையின் மயக்கால் சொல்லுவதேயன்றி ஆத்மா எப்பொழுதும் சாட்சி மாத்திரையாய் நிற்பதாம் என்க.

17. தூமமும் செலும் தூசியும் பனியும் என்றாழை
ஏமம்அற்றிட மறைப்பபோல் இயங்கும் அத்தகையின்,
நாமம் அற்ற இம்மாயையும் நவிலும் ஆன்மாவைச்
சேமம் நீக்கியே மறைத்தல் போல் தெரிகுறும், மயக்கின்.

18. கறங்குபோல் சுற்றப்பட்டவற்(கு) உலகமும் கறங்காப்
பிறங்கும் சுற்றியே ; வானில் பல்நூறு பல்மதிகள்
நிறங்கொடு கிளர்ந்(து) ஒளிரும் ஓர்மதியினில் தோன்றும்,
திறங்கொடே ஜகம் பலதிறத்(து) உழல்வதா, மாயை

19. மயக்கிற் காண்குவன் ; மனத்தொடும் ஆத்துமா சேர
மயக்கம் உற்றனன் பிறப்(பு) இறப்(பு) உழல்வினில் மயங்கிக்
கயத்தலைக்கண் ஆர் எல் எனப் பல்பட ; யோகத்(து)
இயக்கம்உற்ற மான் கட்(டு) அறும் ; முக்தன் ஆய்இயங்கும்.

20. 'மாயையால் சிவன் இணைந்(து) உறும் இரண்டு புள் ஆனான் ;'
'தோயும் ஓர்பொருள் பிறப்(பு) இலா ஒன்றினைத் தோய்ந்தே
ஏயும் பல்வகைப் பொருள் எனல் ஆயிற்(று)' என்(று) எடுத்துக்
கூய் அறைந்ததால் சுருதியும் ; குறிக்க நீ மனத்தே.

எட்டாவது உல்லாஸம் முற்றும்

---

17. புகை, தூசி, பனி இவை சூரியனைத் தொடமுடியா ஆயினும் அச் சூரியனை மறைப்பது போலக் காணப்படுதலின், மாயை ஆத்மாவாகிய மானை (புருஷனை)த் தொடமுடியாதாயினும் ஆத்மாவை மறைப்பதுபோலக் காணும் என்றாழ் - சூரியன்.

18. தும்பி சுற்றுவோனுக்கு உலகம் சுற்றும். ஒருசந்திரனுள்ள வானம் பலநூறு சந்திரனுள்ளவனாகச் சுழலும். அதுபோல வாஸனையின் (ஜன்மாந்தர அநுபவங்களின்) பயனாக ஆத்மா மனத்தோடு சேர்ந்து ஜகம் பல ஜன்மம் எடுத்து உழல்வதாக உணர்வன். குளத்தின் அலையிற்பட்ட சூரியன் பலவாகக் காணப்படுவது போலவே இப்பிறப்பு இறப்புக்களின் தோற்றம் ஆம். கயம் - குளம்; எல் = சூரியன். யோகிக்குப் பந்தம் நீங்கும். யோகாத்மா ஜீவன்முக்தன் ஆக ஆகிறான்.

20. 'மாயையால்...புள்ளானான்' முண்டக உபநிஷத் 3-1.
'தோயும்ஓர்...ஆயிற்று' யாக்ஞிகீ உபநிஷத் 12-5.
பிறப்புஇலா ஒன்று, மூலப் பிரகிருதி. கூஉய், கூய்என நின்றது, கூவி என்பது பொருள்.



# ஒன்பதாவது உல்லாஸம்

## ஈசுவர உபாசனை

9. நிலத்தொடு நீர் தீ வாயு வான் என்றாழ்
நிலாப் புமான் எனும்சரா சரமாய்

---

### உல்லாஸ இயைபு

ஆத்மாவான பிரஹ்மத்தை உணராதார்க்கு
ஈசுவர வணக்கமே அதையுணர்த்தும் சாதனம் எனல்

### பரசிவத் தன்மை

(மாயை ஈசுவர உபாஸனையால் ஒழியும்)

1. இந்த மாயைதான் ஒழிவ(து) எவ்ஆ(று) எனின், இறைவன்
சந்தம் ஆர்கழல் தொழுதலே ஸாதனம் என்பர் ;
நந்து தத்துவம் முப்பதோ(டு) ஆ(று)எனும் வடிவின்
பொந்தும் ஈசனும் கண்உறும், எட்டு நல்உருவின்.

### ஸகுண உபாஸனை

2. அள(வு) இடற்(கு)ஒணா வடிவினில் அகம் விரை(வு)ஆக
அளவிச் செல்லுதற்(கு) அருகதை ஏலுறுததனால்,
அள(வு) இடப்படும் அஷ்டமா மூர்த்தியாய்க், குருதான்
அளவு செய்தனர், பாவனைப் பெரும்தனம் அடைவான்.

### அண்ட பிண்டங்களின் ஒற்றுமை

3. ஆதிதெய்வதம் ஈர்எழு புவனம் ஆம்அதுவே
நீதிசார் இறைப்பொருளின் பேர்அண்டம்என் உடல்ஆம் ;
ஓதும்அத் தியாத்மிக உடல் பிண்டம் என்(று) உரைப்பர் ;
தீதுதீர இவ்இரண்டையும் உபாஸகன் சேர்த்தே.

---

1. சைவாகம தத்துவம் 36-ஐயும் 2-வது உல்லாஸம் 38, 39-வது செய்யுட்களிற் பார்க்க.

2. அகில ஆத்மபாவனை என்றாலும் ஸர்வாத்ம பாவனை என்றாலும் ஒன்றே. அதனைப் பாவனைப் பெருந்தனம் என்றார் செய்யுளில்.

3. மகேசுவரனது உடல் 36 தத்துவங்கள் ஆம். இவ்வுடல் ஆதிதெய்வதம் என்றும் ஆத்யாத்மிகம் என்றும் இரண்டு வகைப்படும். ஆதிதெய்வதம் என்பது பிரஹ்மாண்டமாம். ஆத்யாத்மிகம் என்பது மனித உடலாம். அண்டத்துக் கொத்ததெல்லாம் பிண்டத்துக்கு என்றுணர்ந்து பிரஹ்மாண்ட புருஷனாகிய பரமாத்மாவே பிண்டாண்ட புருஷனாகிய ஆத்மாவெனப்பாவித்து

வலத்தொடும் எட்டு வடிவினும் விளங்கி
வாய்மை யார் ஆய்பவர், எதனின்

4. அண்டபிண்டத்தின் அவயவம் அவயவி ஒன்றாய்க்
கண்(டு) அகண்டமாம் தியானத்தின் உண்மையைக் கருதி
விண்டதன் உருவாம் பிரமத்தினை நேரில்
கண்டு நற்கதி சார்கிறான் என்பதைக் காட்டும்.

5. பிரமஆண்டம்ஆம் விராட்(டு) உடல் தன்னிலும், உயிர்கள்
விர(வு) உடம்பிலும், ஆறு அறு தத்துவச் சேர்க்கை
விரவி உள்ள(து) ஆம் ; வியஷ்டி ஆம் உடலினில் மனம்தான்
பரவலால் தன(து) உடலினை ஸமஷ்டியா நினைத்தே,

6. இறைவனைத் தனி வியஷ்டியா எண்ணிடின், இவனும்
இறையின் அண்டம் ஆம் ஸமஷ்டியின் வியாப்பியம் இயைவான்
மறையும், இவ்வகை, 'அடைகிறான்' என, வளர்பத்து
முறையின் ஓதுமால் முன்னாக இவற்றினை உணர்ந்தே.

---

மகேசுவரனும் தானும் ஒன்றாய் ஜீவன் முக்தி அடைகிறான் என்பது ஸித்தாந்தம். இதனைப் பின்வரும் செய்யுட்களில் விரித்துரைக்கிறார்.

5. ஆறாறு தத்துவம் - 36 தத்துவம். பிரஹதாரண்ய உபநிஷத் (3-5-13) 'உடலில் உள்ள மனஸ், பிராணன், வாக்கு என்பன காலத்திலும் இடத்திலும் கணக்கற்றிருக்கின்றன. அதாவது லிங்காத்மா என்னும் ஹிரண்ய கர்ப்பனோடு ஒன்றாயிருக்கின்றன. ஹிரண்யகர்ப்பன் முக்கியமாய் மனதிலேயே வேலை செய்கிறான். அவனது சரீரம் பிரஹ்மாண்டமே. அதனால் அப்பிரமாண்டத்திலிருந்து பரிணமித்து வந்த இப்பிண்டாண்டமாகிய உடலிலும் அவன் பரவியிருப்பதாக நினைப்பதில் தவறில்லை. இம்மாதிரி பிரஹ்மாண்டமும் பிண்டாண்டமும் லிங்காத்மாவாகிய ஹிரண்ய கர்ப்பனால் ஸமமாக வியாபிக்கப்பட்டிருப்பதால் இச்சரீரமே பிரஹ்மாண்டம் என்று கருதலாம்' என்று கூறும்.

6. தைத்திரீய உபநிஷத் (2-8)-ல் உபாஸகன் ஆனந்த மயகோசத்தில் இருந்துகொண்டு பிரஹ்ம 'ஐக்கியத்தை அடைகிறான் என்பதை, 'அவன் அன்னமய ஆத்மாவோடு சேருகிறான் ; அவன் பிராணமய ஆத்மாவோடு சேருகிறான் ; அவன் மனோமய ஆத்மாவோடு சேருகிறான் ; அவன் விஞ்ஞானமய ஆத்மாவோடு சேருகிறான் ; அவன் ஆனந்தமய ஆத்மாவோடு சேருகிறான்' என்று ஐந்துமுறையும் அதே உபநிஷத் முடிவில் (3-10) இம்மாதிரியே ஐந்து முறையும் ஆகப் பத்துத் தடவை கூறுகிறது.



நலத்த(து)ஓர் வேறு பொருள்இலை எனவே
நவிற்றுவார், வியாபகம் ஆய்இத்

(1) நிலம்

7. பரம அண்டத்தில் உள்ள பூ ஆதிய உலகம்
விரவு மூலம்தொட்(டு) ஆயிரம் இதழ்வரை உளவாம் ;
உரம்உறும் முது(கு) எலும்பதே மேருஆம் ; பக்கல்
சரு(வு) எலும்புகள் எண்குல மலைஎனச் சாற்றாய்.

(2) நீர்

8. பிங்கலைஇடை கங்கையும் யமுனையும் ; சுழுனை
பொங்கு வாணி ஆம் நல்நதி ; மற்றைய தீர்த்தம்
தங்கும் ஏனைய நாடிகள் ; தாதுக்கள் ஏழும்
அங்க தீவுகள் ; வியர், கண்ணீர், கடலே.

(3) தீ

9. மூலத்(து) உள்ளதே ஊழித்தீ ; அஸ்தியில் வடவை ;
ஆலு(ம்) மின்னல்தீ சுழுனையில் ; அமைந்தது கொப்பூழ்
சாலவும் நிலத்தீஅது ; பரிதித்தீ இதயத்(து) ;
ஏலு(ம்) மூளையுள் சசி ; கண்ஆதிய பிறஒளியே.

---

7. பூஹ், மூலாதாரம்; புவஹ், ஸ்வாதிஷ்டானம் ; ஸுவஹ, மணிபூரகம்; மஹஹ, அநாஹதம் ; ஜனஹ, விசுத்தி ; தபஹ, ஆஞ்ஞா ; ஸத்யம், ஸஹஸ்ராரம் என அறிக. மூலத்தில் பிரஹ்மரந்த்ரம் எனச் சொல்லியிருக்க ஸஹஸ்ராரம் என்பது என்னை எனில், பிரஹ்மரந்த்ரம் ஸஹஸ்ராரவாசலானதால் என்க.

8. மஹாமேரு முதுகெலும்பு; அருகிலுள்ள எலும்புகள் குல பர்வதங்களாம்; கங்கை, பிங்கலாநாடி ; இடை, யமுனையாம் ; ஸுஷும்னாநாடி, ஸரஸ்வதிநதி ; மற்ற நாடிகள், மற்றைப் புண்ணிய நதிகளாம். ஸப்த தாதுக்களும் ஸப்த தீவுகளாம். (வியர்) வெயர்வை, கண்ணீர், முதலியன ஸமுத்திரங்களாம். தாதுக்கள் ஏழாவன: ரஸம், இரத்தம், சுக்கிலம், மூளை, தசை, எலும்பு, தோல் இவைகளாம். தீவு ஏழாவன : (ஜம்புத்வீபம்) நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புஷ்கரம், தெங்கு, கமுகுத் தீவுகளாம்.

9. மூலாதாரத்தில் காலாக்கினி, அஸ்தி - எலும்பு. வடவை - வடவாநலம். மின்னல் தீ - வைத்யுத அக்கினி. கொப்பூழ், நாபி. நிலத்தீ ; பார்த்திவாக்கினி. இதயத்தில் சூர்யாக்நி. கபாலத்தில் சந்திர மண்டலம்.

தலத்(து)உறும் அந்தத் திருக்குரு மூர்த்தி
தக்ஷிணா மூர்த்திக்(கு) இங் நமமே.

---

(4) வாயு

10. அண்டம் தாங்குறும் ப்ரவஹணன் முதலிய, அனைத்தே
பிண்டம் தாங்குறும் வாயுக்கள் பத்து ; அவற்(று) உயிர்க்கால்
கண்ட மூலத்தினின்(று) இடை பிங்கலை கலந்தே,
அண்ட யோனியின் வெப்பம் சார்ஆலம்பம் ஆகி,

11. நாசிவாய் வெளிஏறி நால்மூன்(று) அங்குலத்தில்
மாசுபட்(டு) ஒழிகின்றது ; மதித்திடின் அதுவே
ஆ(சு)இல் சந்திர வடிவிற்(று)ஆய், அங்குலம் எட்டில்
கா(சு) இலா(து) அகம்புகுந்திடும் ; அபானனும் கடிதே

12. அழுக்கை, நீரினை, வாயுவை, விந்துவை வெளியே
கழிக்கும் ; அக்கினி சந்திரர் ஆகியே பிராணன்
சுழிக்கு(ம்) நாடியின் துளையினைத் தோய்ந்(து) உச்சிகாறும்
தெழித்துச் செல்லுறும், உதானன் ஆய்த்திகழ்ந்திடும் விரிந்தே.

13. உணவின் ஸாரத்தை நாள்தொறும் உடலின்எப் புறத்தும்
அணவுவிப்பது வியானன்ஆம் ; உடல்எரி அதனைத்
தணவல் இல்வகைத் தாங்கியே அமைப்பது ஸமானன் ;
எணும்அவ் விக்குளை விளைப்பது நாகன் ஆ விளம்பாய்.

14. கண்ணை மூடியே திறப்பது கூர்மன் ஆம் கழறின் ;
எண்ணும் தும்மலைக் கிருகரன் இயற்றுவித் திடுமால் :
வண்ணம் ஆகக்கொட் டாவியைத் தேவதத் தனுமே
நண்ணுவிப்பவன் ; தனஞ்சயன், பிணம்விடான், பெருக்கும்.

---

10. ப்ரவஹணன் பவகணன் எனத் தற்பவமாகும். இப்பிரவஹணன் முதலிய வாயுக்கள் உலகங்களைத் தாங்குபவை. அனைத்தே - போல. உயிர்க்கால் - பிராணவாயு, மூலாதாரத்தினின்று கிளம்பி இடை பிங்கலையில் (அண்ட யோனி) சூரிய ரூபமாகக் கலந்து நாசித் துவாரங்கள் வழியாக 12 அங்குலம் வெளி வருகிறது. 8 அங்குலத்திலிருந்து சந்திர ரூபமாய் அவ்விடை பிங்கலைகளிற் கலந்து உட்புகுகிறது.

12. சுழிக்கும் நாடி, ஸுஷும்நா நாடி. துளை, பிரஹ்ம மந்திரம். பிராணனே பிரஹ்மரந்திரம் வந்ததும் உதானனாக மாறி வளர்கிறது.

13. அணவுவிப்பது - சேர்ப்பது. தணவல் இல்வகை, குறையாவகை.

14. தனஞ்ஜயன் பிணத்தை விடாதுநின்று உடல்ஊதிப் போகுமாறு செய்கிறான் என்க,



(5 - 8) ஆகாயம், சூரியன், சந்திரன், ஆத்மா.

15. வான், புறத்(து) அகத்தினும் இடம் நனிஉற வளர்க்கும் ;
தோன்று காலத்தை ஆக்கும், ஆதவனொடு மதியும் ;
ஏன்ற தேஹியின் பிராணனோ(டு) அபானன் ஆம்புருஷன்
சான்றின் நிற்பவன் : இவை எட்டும் உடலினில் அறிக.

ஸமநஸ்கயோகம் அமனஸ்கத்தில் கொண்டு செலுத்தும்.

16. மனத்தினோ(டு)இயை தியானம் இன்னதனைத் தன்வழியில்
இனத்தொடும் உறும்எட்டு யோகத்தினில் கொணர்வோன்
மனத்தின்நீங்கிய பரம்பொருள் அடைகுவான் மதிக்கும்
இனத்தின் எட்(டு) உறுப்பு அடங்கிய யோகமும் இவையே.

யோக அங்கங்கள் 8.

இயமமும் நியமமும்

17. அமைதி, உள்மகிழ்வு(ஒடு), வாய்மௌனம், ஐம்பொறிகள்
தமை அடக்குதல், தாட் சண்யம், தயை(ஒடு) ஆஸ்திக்யம்
கமை, உரையிடைத் தூய்மையே, நேர்மையே, மென்மை,
அமையும் உள்ளத்தின் தூய்மை, தீங்கு இழைத்திடா ஆற்றல்.

18. மாணித் தன்மையும், நினைப்பு(ஒடு), தீரமும் மற்றும்
பேணிக் கொள்ளுகை இயமம் ஆப் பேசுவர் ; நியமம்
காணின், ஆடுதல், தூய்மையும், கடவுளின் பூஜை,
ஆணிச் சொல்திறம், ஓமம், நல்ஜபம், தருப்பணமே,

19. தவம், கொடை, குளிர்வெப்பங்கள் தாங்குதல், நமமே,
சிவம் வலம்வரல், நோன்பு(ஒடு), பட்டினி தேரின்
நவம்கொள் ஏனைய உடல்உறு நியமங்கள், நவில்வர்
அவம் பெறுத வாங் நியமமும். ஆஸனம் அறைவல்.

---

15. வான், ஆகாசம் (Ether). சூரியன் பிராணன் ; சந்திரன் அபானன். புருஷன் ஸாட்சி மாத்திரை ஆன ஆன்மா.

16. மனத்தினோடு இயைதியானம் - ஸமநஸ்கம். மனத்தின் நீங்கிய பரம் பொருள், அமநஸ்கனான ஈசுவரன், ஈசுவரனை அடைவான் என்க.

17-18. இயமம், மனத்தை யடக்குதல், அதில் முக்கியமாகப் பதினாறு வகை கூறினார். உள்மகிழ்வு = திருப்தி. ஆஸ்திக்யம், தெய்வ நம்பிக்கை.

19. நியமம், உடலடக்கம். இதில் முக்கியமாகப் பதினைந்துவகை கூறினார். ஆடுதல், நீராடுதல். தர்ப்பணம், திருப்திசெய்தல் என்றபடி. பிரதக்ஷணம் என்பதற்கு எதுகை நோக்கிச் சிவம் வலம்வரல் என்றார். வாங்நியமத்தையும் உடலடக்கத்தோடு சேர்த்தார்.

### ஆஸனம்

20. சுவத்திகம், பசுமுகத்தொடு, பதுமம், நல்அன்னம்,
நவிற்றுவர் பிரமாஸனம் ஆகவே நான்கை ;
உவப்பின் காருடம், நரஸிம்ஹம் கூர்மமே, நாகம்
தவற்(று) உறாத வைணவ முறை இருக்கை ஆம்சாற்றின்.

21. வீரம், வச்சிரம், மயூரமே, சுத்தமே, மேன்மை
கூர் உருத்திர ஆஸனம் ; யோனி ஆம் சாக்தம் ;
சாரும் பச்சிமதாநகம் சைவ ஆஸனம் ஆம் ;
நேருவார் நிராலம்பனம் ஸதாசிவ நினைப்பின்.

### பிராணயாமமும் பிரத்தியாஹாரமும்

22. உயிர்ப்(பு) அடக்குதல் உரைத்திடின் இரேசக பூரகங்கள்
செயிர்ப்பு இல் கும்பகம் என்னும் முப்பகுதி ஆம் செப்பின் ;
அயர்ப்(பு) இலாமல் ஐம்பொறிகளை விஷயங்கள் நின்றும்
அயிர்ப்(பு) அறப் பிரித்(து) அடக்குதல் பிரத்தியாஹாரம்

### தாரணை தியான ஸமாதிகள்

23. தாங்கும் ஓர்இடம் தன்னிலே மனத்தினை நிறுத்தல்
ஓங்கும் தாரணை ; பிரமன், மால், சிவன் எனு(ம்) மூர்த்தி
ஈங்குதன் மனத்(து) இடம்பெறச் சிந்தித்தல் தியானம் ;
ஆங்கு அதன்கணே அசைவு அற நிற்றலே ஸமாதி.

---

20. ஆஸனத்தை பிரஹ்மாஸனம், வைஷ்ணவாஸனம், ரௌத்ராஸனம், சாக்தாஸனம், சைவாஸனம் என வகைப்படுத்துக் கூறினர். இவற்றின்வேறுபாடுகளை யோகப் பெருநூல்களில் கண்டு தெளிக.

21. சாக்தம் நாய்போல் அமர்தல். நிராலம்பமாயுள்ள ஸதாசிவமாகிய அகண்ட பரமாத்ம தியானத்துக்கு ஸுகாஸனமே சிறந்த தென்றார்.

22. பிராணயாமம், உயிர்ப்பு அடக்குதல். அது ரேசகம், பூரகம், கும்பகம் என முப்பகுதியது. பிரத்யாஹாரம், இந்திரியங்களை விஷயங்களினின்றும் பிரித்தமைப்பதாம்.

23. தாரணைக்கு உடலிலுள்ள ஷடாதார சக்கரங்கள் சிறந்த கருவிகள். தாரணை மனத்தை ஓர்மைப்படுத்தல்; தியானம் அவ்வகை ஓர்மைப் படுத்திய விஷயத்தை நெடுநேரம் நினைத்திருத்தலாம்.

24. எண்ணம் அற்ற(து) ஓர் ஸமாதியே விகற்பம் இல்லது ஆம்
திண்ணம் ஆக ஆண்(டு) அறிபவன் அறிபொருள் இலதால் ;
எண்ணம் அற்றிடின் பிராணனும் அசை(வு) அறஇருக்கும் ;
வண்ண யோகத்தைத் தியானத்தின் வழிக்கொளல் முறையே.

### லம்பிகா யோகம்

25. அடக்கியே உயிர்வாயுவை, அபானனைச் சுருக்கி,
கிடக்க நாவினை உள்உறு நாவின்மேல் இருத்தி,
மடக்கி வைத்தலே லம்பிகா யோகம்ஆம் ; மற்றும்
அடக்கு சித்தம் இங்(கு) அசை(வு)அற நிற்கவும், உயிர்க்கால்

26. நடுத்துளையினைச் சாரவே, ஐம்பெரும் பூதம்
அடிக்குமேல் உயர்முழம்பெறு தாளினில், கொப்பூழ்
இடத்தில், தொண்டையில், புருநடு, உச்சியில் எல்லை
படைத்(து) உரம்பெறும் தன்மையை வெல்ல, இக்குறிகள்

27. எதிர்ப்படும் : மல(ம்) மூத்திரம் கோழைகள் சுருங்கிச்
சதிர்ப்படும் ; உடல்நோய் அறும், இலகுஆம் ; நாற்றம்,
குதிப்பொடும் குரல், நிறம், இவை மூன்றுமே நன்மை
விதிர்ப்பொடும் வெளித்தோன்றிடும் நிலத்தி யானத்தே.

---

24. ஸமாதி ஸவிகல்பம் நிர் விகல்பம் என இருவகைப்படும். தியானத்தில் புத்தி நிலைத்து நிற்பது ஸமாதியாம். ஸவிகற்பம் கண்டத்தியானம்; நிர்விகற்பம் அகண்டத்தியானம். சித்தம் அசைவற்றிருப்பின் பிராணனும் நிச்சலமாயிருக்கும். சித்த நிச்சலத்துக்குத் தியானத்தோடு கூடிய யோகம் அப்பியசிக்கப்படவேண்டும்.

25. அபான வாயுவைச் சுருக்கி, பிராண வாயுவை அடக்கி, நாக்கை மடக்கித் தாலுமூலத்திற்குக் கொண்டுபோய் நிறுத்துவதை லம்பிகா யோகம் என்பர். சித்தத்தைக் கட்டித் தியானயோகம் செய்ய இது நல்ல மார்க்கம் ஆம்.

26. பிருதிவி தத்துவம் பாதத்திலிருந்து முழங்கால் வரை; அப்பு தத்துவம் முழங்காலிலிருந்து கொப்பூழ் வரை; தேயு தத்துவம் கொப்பூழிலிருந்து கண்டம் வரை; வாயு தத்துவம் கண்டத்திலிருந்து புருவ மத்தி வரை. ஆகாச தத்துவம் புருவ நடுவிலிருந்து பிரஹ்மாந்திரம் வரை உள்ளன. தாரணையினால் இவ்வைம்பூதங்களையும் அவை அவையுள்ள இடங்களில் அடக்கியாளலாம். அதன் பயனாக வந்த குணங்களை 27 - 30 பாட்டுக்களால் கூறுகிறார்.

28. நிலத்தகைமையை வென்றபின், நீரினைச் சயித்தோன்
வலத்தின் முள்நுனி தைக்கலான், மருவிய சேற்றில்
ஜலத்தில் மூழ்கலன், பசியும் நீர்வேட்கையும் சகிப்பான்
நலத்தின் தொண்டைகா(று) ஓங்கிடும் தீயினை நலித்தோன்.

29. வேண்டும் பேர்அனம் பானமும் விரும்பியே உண்பான்,
யாண்டும் தாங்குவன் வெயிலினைச் சூட்டினை ; தூரத்(து)
ஈண்டும் கேள்வியும் பார்வையும் எய்துவான்; புருவம்
பூண்ட வாயுவை யோகினால் வென்றவன் மூன்று

30. காலஞானமும் கரு(து)அணிமா முதல்அஷ்ட
கோல ஸித்தியும் எல்லைஇல் ஆற்றலும் படைப்பான் ;

**இறைவன் யோகத்துக் காணப்படும் விதம்**

ஞாலம்ஆதி ஐம்பூதத்தின் வெற்றியை நவிலும்
சீலம் சொல்லினும் ; சுழுனையில் பிராணனும் செல்லின்

31. ஓசை எண்விதத்(து) இயல்உறும் ; மணி, முர(சு), உயர்சங்கு
ஓசை, ஓதநீர், வீணை, புல்லாங்குழல், தாளத்(து)
ஓசை யாதியாம் ; சுழுனையுள் உயிர்உறத், தீ, மின்,
பேசு மீன்பதி, எல்ஒளி யெனப்பிம்பம் பிறங்கும்.

32. நாள்தொறும் செலும் சுவாசத்தின் கணக்கின், யோஜனைகள்
ஓடும்சூரியன் ஒவ்வொரு மூச்சிலும் ; இருபஃ(து)
ஓடும்ஓர் பதிற்றுறு சதத்(து)அறு சதஉயிர்ப்பு
வீடுகின்றன மனிதனுக்கு எல்எழும் ஒருதினம் விடுத்தே.

**யோகத்தில் பிரணவம் தோன்றும் முறை**

33. மூச்சுத்தோ(று) ‘அவன் நான்’எனும் ஸோஹ மந்திரத்தைப்
பேச்(சு)அ(து) இன்றியே ஆயுள் நீட்டித்திடச் செபிக்கும் :

31. ஸுஷும்னைக்குள் பிராணன் இருக்கும்போது ஈசுவரன், அக்கினி போலவும், மின்னல் போலவும், நட்சத்திரங்களைப் போலவும், தாராபதியாகிய சந்திரனைப் போலவும், சூரியனைப் போலவும் பிம்பரூபமாகத் தெரிவான் என்க. மீன், அதன்பதி எனக் கொள்க.

32. நிமிஷத்துக்கு 15 சுவாசமாக நாளுக்கு 21,600 சுவாசம் வருவது காண்க. ஒவ்வொரு சுவாசத்திற்கும் சூரியன் 21,600 யோஜனை செல்லுகிறான் என்க.

33. ஸோஹம்பாவனை பண்ணுவது ஆயுள் விருத்திக்கு. மூச்சுவிடுவதனால் உஷ்ணம் விருத்தியாவதனால் அவ்வுஷ்ணத்தை அஜபாநலம் என்றும், அந்த ஸோஹமந்திரத்தை ஹம்ஸமந்திரம் என்றும் கூறினர்.



ஏச்(சு)இல் இன்னதே இதயத்தீ வளர்ப்ப(து) ஆதலினால்
மூச்சைக் கூர்ந்(து), அஜபாநலம், அம்ஸம் என்று உரைப்பர்.

34. ஸோஹம் என்பதில் உயிரையும் இறுதி மெய்யினையும்
வாகினில் கொளின், ஓம்எனும் பிரணவம் வயங்கும் ;
ஓகையின் அது அ உ ம பிந்து நாதமும் ஆம் :
சேகுஉற, அயன், மால், உருத்திரன், இறை, சிவம் ஆம்.

35. தத்துவங்கள் முப்பத்(து) ஓர்ஆறொடும் இவர் வசிக்க
ஒத்துநின்ற ஐஓலி பெறும் அக்ஷரம், அதுகொண்(டு)
இத்தரைக்கண் மெய்வளர்ந்த(து) ; அஷ்டாங்க யோகத்தின்
ஸித்தி எய்துவான் உபாஸகன், குருசிவன் அருளால்.

36. ஸத்சித் ஆநந்த வடிவமாய்ப், பிந்து நாதத்துள்
வைச்ச ஆன்மம்ஆய், முதல்நடு முடி(வு)என வயங்கும்,
உச்சிதப் பெருங்குரவர்க்குக் குருஎனும் ஒருவர்க்(கு)
இச்சையோடும் இந்நமம் சிறந்(து) எழிலொடும் இயைக.

ஒன்பதாவது உல்லாஸம் முற்றும்

---

34 - 36. ஸோவில் உள்ள உயிராகிய ஓவும் ஹம் இல் உள்ள மெய்யாகிய ம்-உம் சேர்ந்தே ஓம் என்றாயின. ம் எனும் மெய்யை உச்சரிக்க உதவுவது பிந்து. இப்பிந்து மூலதாரத்துத் தொடங்கி சூடுண்டபிராணன் செல்லும் ஸுஷும்நா நாடியினுள் நாதமாக ஒலிக்கும். (தமிழில் எழுதும் (உ) பிள்ளையார் சுழியிலும் சுழியைப் பிந்து என்றும் கோட்டை நாதம் என்றும் கூறுவது இக்கருத்தை வெளிப்படுத்தவே என அறிக.) அதனால் பிரணவம், அ, உ, ம், பிந்து, நாதம், என ஐவகைப்பட லாயிற்று. அ, ஸத்ரூபம், உ சித்ரூபம் ; ம் ஆநந்தரூபம் ; பிந்து வெளிப்படாத நாமரூபம் ; நாதம் வெளிப்பட்ட நாமரூபங்கள். அதனால் ஸச்சிதாநந்தமாயுள்ள அவனே ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரகர்த்தாவாகிறான். இதனால்தான் ஈசுவரனை அவனது கிரியைகளால் குறிப்பிடுகிறார்கள். அவனை அவனாகவே வர்ணிப்பதில்லை.

# பத்தாவது உல்லாஸம்

## தன்னைத்தான் அடைதல்

10. யாதினால் எல்லாப் பொருளுக்கும் ஆன்மா
இத்துதி நூலினால் நேர்மை

---

### நூற்பயன்

1. பற்றினால் வரைப்பட்(டு)உள நான்எனும் நிலையை
முற்ற நீக்கியே பூரண அகம் எனும் நிலையை
உற்று நிற்பதே, இந்தநூல் ஓதுவோர் பயன் ஆய்ச்
சொற்று, நூலினை முடித்தனர் சங்கரத் தூயோர்.

2. மக்கள் பேரர்கள் இலம்நிலம் மணியொடு கூலம்
ஒக்க பூமி பாதலத்தொடு துறக்கத்(து) உண்டாகும்
தக்க பாகங்கள் சமைப்பவன் குளிர்அறல் கடுப்ப,
மிக்க நற்பலன் இத்துதிக்(கு) இடையினும் மேவும்.

3. இறைநிலை என்ப(து) ஈச்சுர வடிவத்தின் இருத்தல்
பிறிதின் அன்னதும் ஈசனின் வே(று) இலை, பிறங்க
அறிதி : ஓர்மகன் அகவ, அச்சாயலும் அகவும் ;
இறைவன் செல்வமே எல்லையில் வல்லமை என்ப.

---

1. பற்று, ஆசை. பற்றினால் எல்லைப்பட்டுள்ள நான் என்றது உபாதி பேதத்தால் ஏற்பட்ட ஜீவான்மாவை. பூர்ண அகம் என்றது பரமான்மாவை. சங்கரத்தூயோர் என்றது தமிழ் நூலாசிரியர் வாக்கு. ஓதுவோரது பயன் ஆய் என்க.

2. மணி - ரத்தினம், தனத்தைக் குறித்தது. கூலம், தானியம். பாகங்கள் சமையல் வகைகள் ; பங்குகளும் ஆம். சமையல் செய்பவன் குளிர்காய்ந்தும் கொள்வதுபோலப் பெரிய நோக்கமாகிய பரமேசுவரத் தன்மையையுணர்ந்து அநுபவிக்கும் இடையில் மக்கள் ஆதி சிறு பலன்களும் கிட்டும் என்றார்.

3. மனிதன் நடக்க, அவன் நிழலும் அடுத்து நடப்பதுபோல ஈசுவரனது வல்லமை ஈசுவரனோடு இயற்கையிற் பொருந்தியதாகும்.



ஓதுறத் தெரிக்கப் பட்ட(து) ஈண்(டு) அதனால்
உவப்பின் அவ் விபூதிசார் நிலையும்

---

4. அள(வு)இலாதஅவ் வல்லமைத் திவலையே அணிமா
கிளரும் ஆதி எண்ஸித்திஆம் ; இறைநிலை நன்னர்
வளம்உறக் கரம் வந்திடின் இவைதாமே மருவும் ;
உளம்உற இறைநிலை உறவே இதை உரைப்பாய்.

5. எவன்றன் வல்லமைத் துளிகளால் பிரமன்மால் சிவன்முன்
அவர்கள் வல்லமை உற்றவர் ஆகின்றார் மதிப்பின்,
அவன்றன் நாமமே அறைந்திடின், ஸதாசிவன் என்னும்
பவம் தவிர்ந்த ஆன்மா எனப் பகருக கதித்தே.

6. பூக் கொணர்பவன் பூமணம் துய்த்தலின், பூன்ற
வாக்கியத்தினால் மதிபடும் பூரண அஹத்தைத்
தேக்கி வாய்த்தவன், இச்சிறு தேவர்தம் மகிமை
மீக்கொளல், ஒரு விந்தையும் அன்(று) ; இதை உணர்க.

### ஆணிமா ஆதி 8 ஸித்திகள்

7. பரந்த ஆத்துமா நுண்உயிர்ப் படிதலே அணிமா ;
பரந்த அண்டம் தொட்(டு) ஈசன்ஆம் எல்லைவாய்ப் பரந்து
நிரந்தரித்த முப்பான் அறு தத்துவச் சேர்க்கை
பிரிந்(து) எதிர்ப்பட வெளியிலே நிற்றல்ஆம் மஹிமா.

8. மேருஒத்த அங்கத்தினன் விழைவின் பஞ்(சு) எனவே
நேருதற்(கு) இவண்இயம்புவர் இலகிமா என்றே ;
பாரமோ(டு) உறலே கரிமா எனப் பகர்வர் ;
ஓரின் பிராப்தி பாதலத்தவன் பிரமனா(டு) உணர்தல்.

---

4. அணிமா. மஹிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்பன, முறையே, சிறுமை, பெருமை, கனம், லேசு, தூரதிருஷ்டி, இச்சா ஸ்வதந்திரம், அதிகார வல்லமை, அடக்கியாளும் வல்லபம் என்பவையாம்.

5. ஆத்மா வென்பது ஸதாசிவமாகிய பரமாத்மாவே. அப்பரமாத்மாவின் வல்லமை லேசத்தாலேயே பிரஹ்மா, விஷ்ணு, சிவன் என்பவர் விளங்குகிறார்கள்.

நீதிஅறக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல்
செப்புதல் இவற்றினால் தானே

---

9. வான்வழிச் செலல் மற்றைய ஸித்திகள் இச்சை
தான்வரப் பெறல்தான் பிராகாமியம் ; தன்மெய்
ஊன் விளக்கினால் எவற்றையும் உணரல் ப்ராகாச்யம் ;
வான்மணி முதல்உலகில் முத்தொழில் செய்தல் இறைமை.

10. உலகமும் அவற்(று) உரியபாலநரும் தன்வசத்தே
இலகிநின்றிட வசிப்பதே வசியம்ஆம் ; எளிதின்
பலன்உறச் சிவயோகிபால் இன்னவை படியும் ;

ஈசுவர உபாஸனையின் மஹிமை

'இலகுவார் இவன்வசத்தினில் தேவர்கள்' எனினே,

11. அரசன் வேங்கை பாம்(பு)ஆண் பெண்ஆதியவர்,
விரகன்இன் னவன்வயம் எனல்,விளம்புதல் வேண்டா.
சருவஆத்துமா நிலைஎனும் சாம்பிராச் சியத்தைச்
சருவினோர்க்(கு)எது வராதது ஸமாதியர் அவர்க்கே.

12. ஞானவான் இதைநவிற் றும்போ(து) உயர்ந்த ஸர்வாத்ம
மோனமேல் நிலைகருதிக், கீழ்ப்பயனினை வெறுத்தே

---

9. பிராகாம்யம், ஆகாச கமனம் ஆதி ஸித்திகளைச் செய்தலும், நினைத்தது கைவருதலும் ஆம். இப்பிராகாம்யத்தை ஒட்டிப் பிராகாச்யம் என்ற சக்தி ஒன்று உண்டென்றும், அதனால் யோகி, தன் சரீரத்தில் நிகழ்வது கொண்டு, உலகத்தில் நடப்பனவற்றை உணருகிறான் என்றும் கூறினார். இறைமை, ஈசித்வம். இச் சித்தியுணர்ச்சியால் ஜீவான்மா பூரண ஆன்மத் தன்மை யறிந்து அநுபவிக்குங்கால் முத்தொழில் செய்யல் இயலாது என்பார் மதம் கண்டிக்கப்பட்டது. வான்மணி, விண்மணி, சூரியன்.

10. 'இலகுவார்...தேவர்கள்' என்றது தைத்திரீய ஆரண்யகம் 3-13.

11. ஸர்வாத்மா என்றது தமிழ்ப் புணர்ச்சி ஏற்றுச் சந்தத்தால் சருவ வாத்துமா என்றாயிற்று.



வா(து)அறச் சேரும் ; எண்விதம் திரிந்த
வளமையும் தடைபடா(து) அமையும்.

---

ஈனம் அற்றிடல் வேண்டுமால் ; தன்னையே அடைதல்
ஆனஸித்தியே ஏற்றம்ஆர் இறைமை என்(று) அறிக.

தெய்வபக்தி, குருபக்தி ஞானத்துக்கு இன்றியமையாதன

13. "ஈசன்பால் மிகப்பற்(று) உளோன், ஈசனைப்போன்றே
பேசும் ஸத்குருப் பற்(று)உளோன், உயர்மனத்(து)அவற்கே
பேசும் இப்பொருள் விளங்குறும்" பிறங்கும்அவ் ஒளிஆய்
ஓஜஸோ(டு)உல(கு) ஒளிர்தர ஒளிர்வதே ஒளிர்க.

பத்தாவது உல்லாஸம் முற்றும்

தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரமும் அதற்கு வார்த்திகம் ஆகிய
மானஸோல்லாஸமும் முற்றுப்பெற்றது

ஓம் தத் ஸத்

---

12. இறைமை. ஸாம்ராஜ்யம். சுவேதாசுவதர உபநிஷத் (6 - 23.) வாக்கியம் "ஈசன்பால்...விளங்குறும்" என்பது. உயர்மனத்து அவற்கே என்றது, ஈசுவரபக்தியும், குருபக்தியும் உள்ள மகாத்மாவுக்குத் தான் இந்நூலிற் கூறப்பட்டுள்ள உண்மைகள் நன்கு விளங்கும் என்றபடி.

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 16 | 7 | விளக்கும் | விளக்கம் |
| 33 | 12 | மூன்ருவதுவது | மூன்ருவது |
| 38 | 9 | ஸாரத்தை | ஸாரத்தை |
| 44 | 18 | அது | அஃ(து) |
| 50 | 14 | யளித்தலால் | யளித்ததால் |
| 52 | 25 | தத்துவங்கனே | தத்துவங்களே |
| 50 | 4 | ஆதியும் | ஆதியவும் |
| ... | 15 | தள்ளி. | தள்ளி |
| 55 | 12 | தானும். | தானும் |
| 57 | 18 | மயக்கு | மயக்(கு) |
| 66 | 8 | பிரம ஆண்டம் | பிரம அண்டம் |
| 69 | 17 | ஆற்றல். | ஆற்றல், |

# திருநுதி

## (ஸ்ரீ ஸ்துதி)

ஸ்ரீ வேதாந்த தேசிகனது
ஸ்ரீ ஸ்துதி இருபத்துநான்கு சுலோகங்களில்
அநுக்கிரகதாயகமாயுள்ள பதினறு சுலோகங்களைச்
சிவத்தியானநந்த மஹர்ஷி தமிழிற் பாடியது.

1. அளவறு விபவப் பிரசித்தி யுடனே
அணிசுபங் கட்கெலாம் சுபமாய்த்
தளமுறு சுயமார் காந்தியை அணிந்து
மதுவினைச் சயித்தவன் மார்பை
வளமுறும் இருப்பாய் வகித்(து)இக பரத்தின்
மகிமையை நரர்கள் வேண்டுவதாய்
உளபுகழ் உருவின் திருஎனும் உனையே
கதியிலேன் சரணம் உற்றனனே.

2. தோன்றிய தரிய பாற்கடல் அன்றேல்
துகள்அறும் *எக்கியத் தலத்தோ,
ஊன்றியே அமர்ந்த இடமது மரைக்கா(டு)
அன்றெனில் †விண்டுவின் உரமோ,
பூன்ற செல்வந்தான் அகிலங்கள் அன்றேல்
பொருந்துறு ‡திப்பிய பதமோ,
ஏன்றுள தேவீ, எல்லையில் குணத்தோய்,
எவண் உனைப் புகழ்வர்சிற் றுணர்வோர்!

3. பிறர்புகழ் பெருமை யளிக்கின்ருய் நீதான்
பிறங்கு மெய்யினர் புகழ்கேட்டே;
கறங்குறும் இதரக் கதியிலேன் துதிசெய்
கருத்துளேன் காரியம் முடித்தே

---

*சீதையவதாரம். †இலக்குமி. ‡பரமபதம்.

பிறங்குவேன் ; உனது திருவடிச் சேவை
பிறன்எவன் புரியுற விழையான்,
அறந்தரு சேமம் அல்லொடு பகலும்
அடைவதற்(கு) அருநெறி யெனவே ?

4. உலகமே உடலாய்க் கொண்டுள எவன(து)
உள்ளத்தாற் சராசர உவைகள்
இலகுறத் தோன்றி ஒளிர்ந்தி ருந்தழியும்
இன்னதோர் சுபநிறைந் ததுவாய்
நலமுற யோகின் அமர்ந்தவர் இலக்கா
நாடிநிற் கின்றஅப் பூன்ற
சொலஇயலாத *ஒளியும் உன் பஞ்சிச்
சீறடிக் குறிக்கொடே துலங்கும்.

5. முகுந்தனிற் கலந்திச் சகங்களுக் கிறைவி
யாகநீ மொழியநிற் கின்றாய் ;
தகும் இலக்குமி, இந்திரை, திருமாலின்
தலைவி, பாற்கடல் வளர் தநயை
மிகுமறை யுனது பதுமை முற்பெயராற்
பணயம் செய் நாமத்தை விழைவோர்
†அகமுறு பிறவிச் சக்கரத் துழலும்
அதனை எந்நாளுமே அடையார்.

6. உலகினுக் கரசென் றுன்னையே சிலரும்
உன் ‡அன்(பு) என்(று) இதரரும் உரைப்பர் ;
கலகம் செய்வதுவே கருத்தினர் ; வெள்ளம்
கடுகி ஆழ்ந்(து) எழுபவர்போல், அம்
மலினபுத் தியரால் என்பயன் ? உனது
மனம் உவப்(பு) அடைகுவான் லீலை
பலபுரி பகவான், சுருதி உட்பொருள், நீர்
பரம்பொருள் இருவரும் எமக்கே.

7. சங்கடம் அடைந்தோர் துன்பங்கள் தீர்க்கும்
சங்கற்பம் படைத்த விண்டுவினின்
பங்கின்அன்(பு) உறையும் மங்கலை எனவே
பகருவர் ; பாற்கடல் அதுதான்

*விஷ்ணு. †பாபம். ‡பிரியன், விஷ்ணு.



இங்(கு) அலையாகப் பரவினும் அதனின்
இனிமையை விட்டிரா ததுபோற்
பொங்குறும் அவன்றன் பிறப்புத் தோ(று)அவனைப்
பொருந்தி நீ அநுகுலத்(து) உறைவாய்.

8. அரி மரகதத்தின் அகலத்தில் உனது
முதலுரு, அழகினை அளித்துப்,
பரும் உயர்தனத்தின் மெலிநடு அடைந்து,
பாரினில் உருக்கி ஊற்றிய பொன்
புரை ஒளிவீசி, ஆனந்தக் கடலாப்
பொருந்(து) அவதாரங்கள் தோறும்
நிரையுறு திரையே இதுவெனப் பரவி,
நிறைகளிப்(பு) அளித்(து) ஒடுங்குறுமே.

9. படைப்புமுற் பரந்த வாக்கெலாம் எவள்தன்*
விபூதியே எனப் பகர்வாரோ,
நொடித்த †யார் புருவத்(து) ‡ஏமல ரானுக்(கு)
ஈசனும் நொடியிற் கிங்கரனும்,
படைத்த ஆயிரங்கண் ஏக லட்சியத்தின்
§எவளையே பார்க்குறும், அந்தத்
தொடுத்தமூ வர்கள்தம் தோற்றமார் நிலைமை
தோய்ந்த(து) உன் சிறு நினைப்பதினே.

10. கணவன் முன்னிலையிற் கடிமரை மலராம்
காவல்சார் பீடத்தின் அமர்ந்த,
தணவறு சுதையின் ஓட்டத்தின் பின்னர்ச்
சமுத்திரத் துதித்த உன்றன்னை
வணமலர் மாரி மூடிய புவனத்(து)
அரசுவாப் புட்கலா வர்த்தம்
எணு(ம்)முகில் கொண்டே பொற்குடத் தெடுத்து
மஞ்சனம் இயற்றின மாதோ.

11. துயரினர்க் காக்கும் விரதத்தைக் கைக்கொண்(டு)
அமுதுகு முகிலெனத் தோய்ந்தே
அயர்வுதீர் வைகல் கிண்கிணி வாய்க்கொள்
அலரெனச் செல்லும் உன்கடைக்கண்

*சரஸ்வதி. †பார்வதி. ‡புஷ்ப பாணன். §இந்திராணி.

மயர்(வு)அற எந்தத் திக்கினில் விழுமோ
வளரும்அத் திக்கெலாம் ஸம்பத்(து)
உயர்வுற எழுந்(து) இங்(கு) ஒன்றின்முன் ஒன்றாய்
ஓங்குற வல்விரைந் துறுமே.

12. *உங்களைப் பெறவென் றெண்ணி ஏகாந்த
நிட்டையி னுறைந்(து) யோகத்துக்(கு)
அங்கமாம் பொருளை அடையும் இச்சையினை
அகத்தினிற் றரித்தவர்க்(கு) அவர்தாம்
இங்கு வேண்டியநற் பொருள்களின் தாரை
இரும்புவி யிடத்தினோ, குபேரன்
தங்கும் இல்லிருந்தோ, அம்பர நின்றோ,
சமுத்திரம் தன்னினோ வருமே.

13. நன்மைகள் யாவும் அடைகவும், ஆதி
அகப்பகை நலிக்கவும், பாவத்
தின்மைகள் யாவும் ஓட்டவும், அநாதி
அவித்தையைச் சிதைக்கவும், பிறவித்
தன்மைகள் ஒழிக்கும் உன்தயைக் கோட்டைச்
சரணென அடைகுவர், மலம்என்
புன்மைகள் ஒழித்த மனத்தினர், அம்மே,
புருடனும் மாலுடை அன்பே.

14. சங்கடம் தீர்க்கும் திருஉறை தலமாம்
திரிதச மகிளைகள் சிரத்தின்
அங்கமா(ம்) மாலை அலங்கரித் திடும்உன்
அடிகளை வணங்குவல்; சிறிது
தொங்கிய சிரத்தின் உபாசனை புரியும்
தூயவர், இவ்வுடல் கழன்றே
பொங்குறு தமம்இல் வாஸுதேவன்றன்
†பொழிலினில் தகைசிறந் துறைவார்.

* இப்பாட்டைக் காஞ்சியில் தாயார் சந்நிதியிற் பாடி ஒரு ஏழைப் பிராஹ்மணனுக்காகப்பொன்மழை பெய்வித்தார் தேசிகன் என்ப. இதனாலேயே இந்நூலுக்குக் கனகதாராஸ்தவம் என்ற பெயர் வந்ததென்றும் கூறுவர் சிலர்.
†உலகத்தில்.



15. ஆய்ந்திடின் தாய்நீ ஆயினை; பகவான்
வாசுதேவன் பிதா ஆனான்;
தோய்ந்தஉம் இருவர் தயைக்கும் நான்ஆனேன்
சொற்பெறு பாத்திரம் ஆக:
தேர்ந்திடா(து) அளித்தார் தேசிகர் எனைநும்
சேவக னய்இருக் கெனவே;
'வாய்ந்(து) உனக்(கு) என்ன வேண்டும்?' என்பதின்உன்
வாண்முகம் குறுநகைத் தன்றே.

16. மங்க லங்கட்குக் குறைவிலா நிதியாய்,
வருணிக்கும் வகைபெருக் கருணை
தங்கும் எல்லையதாய், நித்தியா நந்தம்
சார்உரு வாகி, வேதாந் தத்(து)
இங்கு மந்தார மாலையாய், மதுவை
இறுத்தவன் திப்பியத் திருவாய்,
எங்குறு புவனத் *தேநுவாம் தேவி
என்றும்என் மனத்(து) உறைபவளே.

### நூற்பயனும் வரலாறும்

தீஞ்சுவை வாக்கோன் தேசிகன் உரைத்த
திருநுதி இருபத்து நான்கில்
மீஞ்சுவை பொதிந்த சோடசப் பாவை
மிகுசிவத் தியான ஆநந்தன்
தேஞ்சுவை துளிக்கத் தமிழினிற் பாடித்
திருவினின் கடாட்சத்தை யடைந்தான்;
நாஞ்சுவைத் ததையே நலமெலாம் அடைய
நாடுவோம் உலகினீர் வாரீர்.

*காமதேனு.

கூடாரப் பாறை

# முருகன் திருப்பதிகம்

—∞∞—

[ஸ்ரீமத் சிவத்தியானாநந்த மஹர்ஷி
சிவகிரியில் தங்கியிருந்தபோது பாடியது.]

1. அண்டினோர்க் காக்க மளிக்குநற் றேவே
யழகிய சிவபுரி புரக்கும்
அன்பன்செந் தட்டிக் காளைப் பாண் டியனு
மருஞ்சின்னத் தம்பியெக் காலுங்
கொண்டசெங் கோலைப் பரிவுடன் காத்துக்
குளிர்வுட னவற்கெலா வாழ்வுங்
கொடுத்தருள் செய்ய வடிச்சுவ டமைத்துக்
குறுமுனி தவத்தினைக் காப்பாய்,
மிண்டர்க ளாகி யிடும்பனோ டெண்ணு
மேன்மையில் கடம்பனு முனது
மெய்வலி யழிக்கப் பொருதபோ துமையாள்
விழைந்தருள் முசலத்தா லவரைப்
பண்டுபோற் சயித்தா யாயினும் அன்னார்
பண்புபெற் றுன்னடி யவராய்ப்
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

2. *வற்சநா டாள்வோன் வற்சலன் பிள்ளை
மருவுருத் தன்மையி னோங்கி
மகத்தவஞ் செய்து பெற்றபுத் திரனாய்
வாழ்புரு டோத்தமன் தீய

*இச்சரிதத்தைச் சிவகிரிப் புராணத்துக் காண்க.



குற்சிதக் கோளின் வயப்படு நிலையாற்
கொண்டதன் னாட்டினி னீங்கிக்
கொடியவெங் காமக் குழிவிழு போகர்
கூறிய வெம்மொழிப் பயனைத்
தற்சிறை யுடலங் குட்டநோய் கவ்வத்
தாங்குருப் புலிக்கர மடைந்து
தரையெலா மலைந்து நல்வினை தூண்டச்
சார்ந்திவ னுனதடி புகல்பீ
பற்சனே யென்னப் பெருமையி னோங்கிப்
படிபுகழ் புலிக்கர முனியாய்ப்
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

3. தாண்டலா விதியாற் பிரமஹத் தியினிற்
சார்பழி பெற்றபாண் டியனைத்
தையல ரிருவர் தம்மொடு மகல்வான்
சார்த்திய தோடுநில் லாம
லாண்டகை யின்மை யறிந்திடா னவரை
யடுத்துயிர் வாங்குவான் பலசா
ரணைந்துபன் னெறியிற் கொல்லுவான் பற்ற
வணுகிய தருணமெல் லாம்வந்
தீண்டிய வுதவி புரிந்ததே யன்றி
யித்தலத் தவன்மனை வியர் தீ
யிறங்கவு மவர்க்கு நீற்றினை யளித்தே
யெய்திய பழியினை யோட்டிப்
பாண்டியன் முன்போ னாட்டினை யாளப்
பரிந்தமீ னாம்பிகை சொக்கர்
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

4. பெருந்தனம் படைத்த பெருமைசால் பலரைப்
பெற்றுளாய், அன்னவர் செல்வம்
பிறங்குநற் கல்விப் பயன்பெறு மறிஞர்
பேசுநற் பெருமையை யடைவான்
திருந்துறச் செய்த லுனது தண்ணளியாற்
சேர்வதே யன்றிமற் றெம்போற்
சீரிய ராலும் ஆற்றிட வரிதாஞ்,
செப்புவே னென்றுகே ளிந்நாள்

வருந்துற நின்ற மிடியெலா மோட்டும்
வள்ளலென் றுலகவர் புகழும்
வண்ணமிச் சீமைச் செல்வர்த மரசை
வயக்குவாய், மாகத ரெல்லாம்
பருந்துசெல் லுயர மெழுந்துநாக் கடிப்பாப்
பகர்ந்திட முயக்குவை, தேவர்
பழுகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

5. பேரிலார் சொல்லு முயர்ச்சிசா லூரும்
பேசுதற் கில்லவர் பல்லோர்
பேரியாழ் போற்றப் பேகனே பாரி
பின்னுருக் காரியென் றேத்தி
நேரலார் புகழ நிற்க,வுன் றெய்வ
நிலையினி னோங்கிய நிருபன்
நின்றவூர் தானுந் தெரிகலா வகையே
நிலவுத லெங்களுக் கெல்லாம்
தேரலாத் துயர மளிப்பது வாகும் ;
செய்யவ, மூன்றுல கத்துந்
தெழிப்புறு கீர்த்தி பரவுற விரைவிற்
செய்குவை, சிறந்தவுன் பெருமை
பாரெலாம் விளங்க வெண்ணினே னுண்மை
பகர்ந்தனென் தேவியென் ஆறு
பழுகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

6. கூடலம் பதியே தமிழர சோங்கிக்
குணம்பெறு பதியெனின், அந்தக்
கூடலம் பதிவாழ் அங்கயற் கண்ணி
கூடிய சுந்தரத் தேவும்
தேடலா வகையே யுன்னரு கிருக்கத்
தேடிவந் துறைந்துளா ரென்னின்,
செப்பு மெட்டெட்டுத் திருவி ளையாடல்
திகழ்வதித் தலமெனக் கூறிப
பாடலோ டாடல் புரிவது பிழையோ,
பார்ப்பவர்க் கதுவொரு குறைவோ,
பண்ணவா, வுன்னைப் பார்த்தவர் பாவம்
பசையறப் பறத்தலைத் தேர்ந்த



பாடகரென் றுஞ் சிவகிரி சேரீர்
பாடுவீர் பரமனை யெனுஞ்சொல்
பழுகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

7. ஆற்றிலே வீழ்ந்து தன்னுயிர் விடுக்க
வகுத்தவுத் தமன்புலிப் பாணி
யாறுசாத் திரமு மறிபவ னகை
வாக்கினை ; அங்கியில் விழுந்தே
சாற்றிய பழியை நீக்குற நினைத்த
தையலர்க் கருளினை நீறு ;
தக்கநற் குடத்துற் பவித்தவன் போற்றச்
சார்த்தினை பாறையிற் *பதத்தைக்
கூற்றினை யுதைத்த பண்ணவன் அடியர்
கூப்புறுஞ் சிரமென மதித்தே ;
கொற்றவ வுனது நற்றவம் வாய்ந்த
குலப்பெரி யார்பலர் வாழும்
பாற்றரும் பசுமைப் பலவள நிறைந்த
பண்புசா லுத்தமப் பதிகள்
பழுகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

8. வீரருள் வீரர் பாவலோர் தம்முள்
மேவிய வுத்தமக் கவிகள்
விரைவினிற் றங்க ளுயிரையு முதவி
மேன்மைசார் புகழ்விரி மகருந்
தீரருட் டீர ரென்றுசொல் பெருமை
சேர்ந்தவர் பலபெயர் தாமும்
திகழ்தரு நாடு பாண்டிநா(டு) ; அதனிற்
றிலதமாஞ் சிவகிரி யிதுதான்
சீரிய குணம்வாய் தொல்பதி யாகுஞ் ;
சிறப்புற வன்னதைப் புரக்குஞ்
செழியனே வென்னிற் சிவன்செய லன்றித்
தேருறுன் மற்றொரு செயலைப்,
பாரினி லவன்பேர் பரந்தவிவ் வுலகிற்
பாவுறச் செய்யு(ம்)நி னுண்மை
பழுகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

* அடிச்சுவட்டை.

9. உத்தமத் தேவே யோங்குபன் மாலை
யுரைத்துளே னென்னினும், உன்சீர்
உற்றவென் செவிதா னுன்னையும் புகழ
வுரைத்ததா, லென்மன மிரும்பி
னத்தனை வன்மை யுள்ளதே யெனினும்
அருட்கட லுனதளி உடனே
யன்னதைக் கரைத்(து), அகமகிழ்ந் தன்னை
யடுத்தவென் நாவினி னின்றே
புத்தியை யுணர்வைப் புகலுறு மொழியைப்
புண்ணிய நெறியினைப் புகன்றுள்,
பொய்யர்தா மறியாப் போதமே யுனது
பொய்யில்சீர் வழுத்தினே னருள்வாய்,
பத்தியிற் படிந்த அடியவர் பல்லோர்
பரபரப் புடனரு கடுத்துப்
பழுகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

10. என்றுயர் தீர வெனக்கருட் செல்வ
மளித்திடல் வேண்டு,மென் றன்னை
யின்பினிற் காக்கு மவரெலாங் கீர்த்தி
யியைந்துபல் வளங்களுந் தோய்ந்து
மன்றினி னடஞ்செய் தாதையின் பூதி
மருவியே திகழ்தரல் வேண்டும்,
மாதவத் தோர்க ளுன்னரு கென்றும்
மருவுமவ் வளமுன திடத்தே
துன்றிடல் வேண்டுந், தூயவுன் னடியைத்
துகளற மொழிபவ ராக்கந்
தோய்ந்திடல் வேண்டு, முலகெலா மின்பச்
சுகம்பெறு வாழ்வுறல் வேண்டும்,
பன்றியாய் மீனங் கமடமுற் பலவாய்ப்
பரிந்துல களித்தசெந் திருமால்
பழுகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

# தமிழ் மொழிக் காஞ்சி

சிவத்தியானநந்த மஹர்ஷி பாடியது

தாக்ஷிணாத்ய கலாநிதி மஹாமஹோபாத்தியாய

டாக்டர் உ. வே. சுவாமிநாதய்யரின் விதேஹ முக்தி நிலை

கடா

தமிழ்ப்பாவை தோள் ஒடியச் சங்கநூல் தேம்பத்
தமிழ்ப்பா மணமற்றே சாம்பத்—தமிழ்ப்பாவோர்
சாமிநா தாவென்றே தாங்கா தலறிவிழப்
பூமியை ஏன் விட்டாய் புகல்.

விடை

1. " உள்ளகாலை உலகத் தமுதத்தை
ஊட்டும் நூலை உமக்களித் தோங்கினேன் ;
கொள்ளை கொள்ளுறு கம்பலை கண்ணீரும்
கூடும் ஆற்றினை ஊட்டினேன் உங்களுக்(கு) ;
எள்ளும் மெய்யினை விட்டபின் என்னுடை
இன்பம் இஃதென எல்லவர் கண்ணிலும்
கொள்ளும் மோனநிலைஇது பாருமின்
கூர்ந்(து) " என, எமக்குண்மை தெரித்தனன்.

2. விண்டுவின் அப் பரம பதத்தினை
வேம்புவையன் மகன் சாமிநாதனும்
அண்ட யோனியினூடே நுழைந்து, பின்
ஆயிரவர் அமரர் கை கூப்புறக்
கண்டு சென்றனன் ; காமர் அமுதத்தைக்
கையிலேந்தி அரமகளிர் தர,
உண்டு தானொரு சோமபானீயனாய்
உன்னதத் தலம் உற்றனன் ; பின்னரும்,

3. தத்துவங்கள் [illegible] தூலமெய்
தாண்டி ஒத்துறு சூக்குமத் தெய்தியே
மெத்திய குணப் பண்பினை மெய்யெனல்
மேன்மை அன்றென் றவற்றை விடுத்துப் பின்
ஒத்த காரண மெய்யினி னேங்கியே
ஒன்றலாத கருவி யொழித்துத் தன்
நித்தமான இறை நிலை எய்தியே
நித்தன் நான் என நிர்த்தனம் செய்தனன்.

4. ஸகுண உண்மை உணர்ந்(து) அதுகூடப் பொய்
சார்ந்து நிற்பதைக் கண்டு, குணமிலா
விகுணம் சார்நிலை மேவி, விளையாட்டா
வெம்மை தண்மைக ளாய துவந்தங்கள்
அகலச், சாந்த உருவ அருவத்தை
அண்டி எய்தி உண்(டு) இல்லையெனும் ஒரு
*பகுதி யற்ற நிலை கவ்வப், பாரினீர்,
பார்மினோ இது †பண்புநீங்(கு) இன்(பு) என்றான்.

5. பதவுலகம் அழியும் எனும் அதைப்
பண்பின் ஊட்டி அழியாப் பதத்தினை
நிதமு மெய்துறு நிட்டையை ஆருறும்
நிண்ணயத்தைத் தெளிவித்த ஜீவனைத்
ததையும் முக்த ஆன்மா எனச்செப்புதல்
சால்ப தாகும்; மரணத்தை எய்தினன்
அதமுற எனல் ஆன் நிலையே அன்றி
ஆரியப் பதி ஆனநிலை அன்றே.

6. ஆயிரம் பிறை கண்டு தொழுதவன்
ஆயிரம் இதழ் பாயும் அமுதத்தை
ஆயிரக் கணக்கான வகையினின்
ஆயிரத்துக்கு மேலாம் தடவைகள்
பாயிரம் சொலிப் பண்பிற் பருகிய
பான்மை வாய்ந்த பரன் சாமிநாதனை
ஆயிரம் தரம் தேவன் எனக்கூறி
ஆநந்தங்கள் கொண்(டு) ஆடி மகிழுவோம்.

---

*ப்ரகிருதி. †நிரதிசயாநந்தம்.